# கல்கி பொருளடக்கம்

மலர் 11 | இதழ் 16 — 1952 ஜூன் 15 — நந்தன ஆனி 2




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் வரும் பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


ஜூன் 14 முதல்
சென்னை
பாரகன் · கிரௌன்
லக்ஷ்மி · திருமகள்
ஸ்ரீ வள்ளி புரொடக்ஷன்ஸ்
வேலைக்காரன்
ஏவி எம் ஸ்டுடியோவில் தயாரித்தது
வள்ளி
இப்பொழுது தென்னிந்தியெங்கும் 50 இடங்களில் நடைபெறுகிறது

கல்கி

மலர் 11

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 46

# வரப்பிரசாதம்

தேவர்களே! உங்கள் சொர்க்க லோகத்தில் மலர்கள் இருப்பது உண்மையானால், இப்போது அவற்றை ஏராளமாகத் திரட்டிக் கொண்டு வாருங்கள். பூலோகத்தின் மீது மலர்மாரி பொழிவதற்கு இதைவிட நல்ல சந்தர்ப்பம் உங்களுக்கு வேறு வாய்க்கப் போவதில்லை.

எந்தையே! சுதந்திர இந்தியாவின் தந்தையே! காந்தி அண்ணலே! வானுலகத்தில் தாங்கள் இன்று எங்கே இருந்தாலும், பரம்பொருளின் பாத கமலத்தடியில் வீற்றிருந்தாலும், இந்தப் புண்ணிய பாரத பூமிக்கு மேலே ஆகாச வெளியில் வட்டமிட்டுக்கொண்டிருந்தாலும், தங்கள் திருவுள்ளம் குளிர்ந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. "என் தேச மக்கள் பசி பட்டினியால் மடிவதைக் காட்டிலும் பெருந் தீமை ஒழுக்கம் கெட்டு ஆத்ம நாசமடைவது அல்லவா? அந்தப் பெருந் தீமைக்குக் காரணமாக உள்ள உணவுக் கட்டுப்பாட்டு முறையை ஒழியுங்கள்!" என்று தாங்கள் இம்மண்ணுலகவாசியா யிருக்கும்போது சொன்னீர்களே! அதை இன்று தங்கள் அருமைத் துணைவர் ராஜாஜி நிறைவேற்றி வைத்து விட்டார். அவருக்கும் எங்களுக்கும் ஆசி கூறுங்கள்!

சென்னைப் பொது மக்களே! ராஜாஜியிடம் நீங்கள் வைத்திருந்த திட நம்பிக்கை இன்று நிறைவேறி விட்டது. உங்களை நீங்களே வாழ்த்திக் கொள்ளுங்கள்!

சந்தேகப் பிராணிகளே! "இன்றைய நிலைமையில் ராஜாஜி முதன் மந்திரியாக வந்துதான் என்ன பிரமாதமான காரியத்தைச் சாதித்துவிட முடியும்?" என்று ஐயமுற்றீர்கள் அல்லவா? உங்கள் சந்தேகம் இவ்வளவு சீக்கிரத்திலேயே தீர்ந்து விட்டது! நீங்கள் அதிர்ஷ்டசாலிகள் என்பதில் சந்தேகம் என்ன?

காங்கிரஸை எதிர்த்த அருமைச் சகோதரர்களே! உங்களுக்கு எமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். உங்களுடைய எதிர்ப்பினாலேதான் ராஜாஜி சென்னை மாகாணத்தின் முதன் மந்திரிப் பொறுப்பை ஏற்கும்படி நேர்ந்தது. அதனாலேதான் சென்னை மக்களுக்கு இந்த எதிர்பாராத அற்புதமான வரப்பிரசாதம் கிடைத்தது. நீங்கள் அடியோடு வாழ்வீர்களாக!

* * * *

மேலே குறிப்பிட்ட வரப்பிரசாதம் என்ன என்பதைப் பற்றி நேயர்களுக்குச் சொல்லவும் வேண்டுமா? உணவுக் கட்டுப்பாடு ஒழிப்புத்தான்!

உணவுக் கண்ட்ரோல்—ரேஷன் முறைகள் பத்து ஆண்டுகளுக்கு முன்னால் யுத்த காலத்தில், பிரிட்டிஷ் சர்க்காரால் இந்த நாட்டில் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டன. அவை நல்ல நோக்கத்துடனேதான் கொண்டு வரப்பட்டன. வங்காளத்தில் நடந்தது போல் ஜனங்கள் பட்டினியால் மடிய விடக்கூடாது என்பது நோக்கம். கிடைக்கும் உணவு எல்லாருக்கும் நிரவிக் கொடுக்கப்பட வேண்டுமென்பது நோக்கம். பேராசை பிடித்த முதலாளிகள் உணவுப் பொருள்களை ஏராளமாக வாங்கிச் சேர்த்து வைத்துக் கொண்டு பின்னால் இஷ்டம்போல் கொள்ளை லாபம் அடிக்கவிடக் கூடாதென்பது நோக்கம். இவையெல்லாம் நல்ல நோக்கங்கள் இல்லையென்று யார் சொல்ல முடியும்?

யுத்த கால நெருக்கடியைச் சமாளிப்பதற்காக ஏற்பட்ட மேற்படி உணவுக் கட்டுப்பாடு பங்கீடு முறைகள் மேலும் நீடித்துக் கொண்டே வந்தன.

பிரிட்டிஷார் நம் நாட்டை விட்டுப் போன பிறகும், இந்திய சுதந்திர சர்க்கார் அந்த விதி முறைகளை அமுல் நடத்தி வந்தார்கள். நல்ல நோக்கத்துடனேதான் அமுல் நடத்தி வந்தார்கள். இல்லை என்று யாரும் சொல்லவில்லை.

ஆனால், "வியாதியைக் காட்டிலும் சிகிச்சை கொடியதாயிற்று" என்பதாக ஒரு முதுமொழி உண்டு. நோயைத் தீர்ப்பதற்காகக் கொடுத்த மருந்து ஆளையே வேலை தீர்த்து விட்டதைப் பற்றிச் சில சமயம் கேள்விப்படுகிறோமல்லவா?

உணவுக் கட்டுப்பாடு—பங்கீடு முறைகள் அந்த மாதிரி நிலைக்கு வந்து விட்டன.

"பட்டினி கிடந்து செத்தாலும் பாதகமில்லை; கண்ட்ரோல் தொலைந்தால் போதும்!" என்று பலரும் வாய் விட்டுச் சொல்லக்கூடிய நிலைமை நாட்டில் ஏற்பட்டு விட்டது.

அந்த அளவுக்கு மக்களின் தினசரி வாழ்க்கையைக் கண்ட்ரோல் விதிகள் பாதிக்கலாயின.

இந்தியா சுதந்திரம் அடைந்ததினால் மக்கள் நியாயமாக அடைந்திருக்க வேண்டிய குதூகலத்தை அடைய முடியாமல் அந்த விதிகள் செய்து விட்டன.

பிரிட்டிஷாரின் கீழ் அடிமை வாழ்க்கை நடத்தியபோது அனுபவித்த தொல்லைகளைக் காட்டிலும் சுதந்திர இந்தியாவில் மக்கள் பன்மடங்கு அதிக தொல்லைகளை அனுபவிக்கும்படி நேர்ந்தது.

அமெரிக்க அக்கிராசனர் ரூஸ்வெல்ட் சென்ற மகா யுத்தத்தின் இறுதிக் காலத்தில் நாலு வகை விடுதலைகளைக் குறித்துப் பேசினார். அவற்றில் "பயத்திலிருந்து விடுதலை" ஒன்று.

பிரிட்டிஷார் இந்தியாவை விட்டுப் போனபோது இந்திய மக்கள் அரசியல் விடுதலை பெற்றார்கள். ஆனால் பயத்தினின்று விடுதலை பெறவில்லை!

"சிப்பாயைக் கண்டஞ்சுவார் — ஊர்ச்
சேவகன் வருதல் கண்டு மனம் பதைப்பார்!"

என்று பாரதியார் பிரிட்டிஷ் ஆட்சியின்போதிருந்த நிலையைக் குறித்துப் பாடினார். அதே நிலை அரசியல் விடுதலை பெற்ற பிறகும் இந் நாட்டில் குடி கொண்டிருந்தது. அதிகாரிகளிடத்தில் பயம் இன்னும் அதிகமாயிற்று; இன்னும் பல புதிய ரூபங்களையும் கொண்டது.

எந்தக் கண்ட்ரோல் விதியை எப்போது மீறி விட்டோமோ, எந்தச் சேவகன் வந்து என்ன கேள்வி கேட்பானோ என்ற பீதியுடனேயே மக்கள் வாழ்க்கை நடத்த வேண்டியதாயிருந்தது.

விருந்தாளிகளைக் கண்டு பயப்பட்டோம்; உறவினரைக் கண்டு பயப்பட்டோம்; சிநேகிதர்கள் வீட்டுக்கு வந்தால் பயப்பட்டோம்; அவர்களைச் சாப்பிடச் சொல்லப் பயப்பட்டோம்; சாப்பிடச் சொன்ன பிறகு அதன் பலன் என்ன ஆகுமோ என்று பயப்பட்டோம்; அடுத்த வாரம் வீட்டில் அரிசி இருக்குமோ என்று பயப்பட்டோம்; ஒருவேளை அதிகமாயிருந்து விடுமோ என்று பயப்பட்டோம்; ரேஷன் கார்டைக் கண்டு பயப்பட்டோம்; அதைக் காணாவிட்டால் அதிகமாய்ப் பயப்பட்டோம்; ரேஷன் ஆபீஸை நினைத்துப் பயப்பட்டோம்; ரேஷன் கடைக்காரரை எண்ணிப் பயப்பட்டோம்; கடை வாசலில் கியூ வரிசையை எண்ணிப் பயப்பட்டோம்; அரிசி வாங்கப் பயப்பட்டோம்; அரிசி வாங்காமலிருக்கவும் பயப்பட்டோம்.

உணவு வாங்கிச் சாப்பிடுவோரை மேற்படி பயம் ஒரு பங்கு பிடித்தது என்றால், உணவு உற்பத்தி செய்வோரைப் பத்து மடங்கு பிடித்தது.

விளைந்ததற்குச் சரியாகக் கணக்குக் கொடுத்தோமா என்ற பயம்; கொடுத்த கணக்கை அதிகாரிகள் சரி என்று ஒப்புக் கொள்வார்களா என்று பயம்; எந்தச் சமயம் வந்து வீட்டைச் சோதனை போட்டுச் சட்டிப் பானைகளை உருட்டுவார்களோ என்று பயம்; சாப்பாட்டுக்கு நெல் விட்டு வைப்பார்களா என்ற பயம்; விதை நெல்லைக் கொண்டு போய் விடுவார்களோ என்று பயம்; "ஐயோ! இப்படிச் செய்யலாமா!" என்று கேட்டால் தடியால் அடிப்பார்களோ என்று பயம்; அடிப்பதையும் அடித்து விட்டு, கோர்ட்டில் கேஸையும் போட்டு இழுத்து அடிப்பார்களோ என்று பயம். பாடுபட்டு விளைவித்த தானியத்தை வெளியில் காட்டுவதற்குப் பயம்; ஓரிடத்திலிருந்து ஓரிடத்திற்குக் கொண்டுபோகப் பயம்; விற்பதற்குப் பயம்; வாங்குவதற்குப் பயம்; பதுக்கி வைப்பதற்குப் பயம்; பதுக்காமல் வைக்கவும் பயம்.

மொத்தத்தில் உணவுப் பொருள் விளைவிப்பதே ஒரு பயங்கரமான, பீதிகரமான காரியம் என்று ஆகி விட்டது.

உள்நாட்டில் உணவுப் பொருள் விளைவு போதிய அளவு பெருகினாலன்றி இந்தியாவுக்கு விமோசனம் இல்லை என்பது அனைவரும் ஒப்புக் கொள்ளும் விஷயம். உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காக அரசாங்கத்தார் கோடிக்கணக்கான பொருள் செலவு செய்து வந்தனர். ஆனால் உணவுக் கண்ட்ரோல் விதிகள்—கண்ட்ரோலுக்கு அடிப்படையான கொள்முதல் முறைகள்—உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்குவதற்கான முயற்சிகளைப் பயனின்றிச் செய்தன.

உணவு உற்பத்தியை ஒரு பீதிகரமான தொழிலாக ஆக்கிவிட்டு, உணவு உற்பத்தியைப் பெருக்க எத்தனை முயற்சிகள் செய்துதான் என்ன பயன்!

* *

இவ்விதமாக, வியாதியைக் காட்டிலும் சிகிச்சை கொடியதாயிற்று. மக்களைப் பசி பட்டினியிலிருந்து காப்பதற்காக ஏற்பட்ட கண்ட்ரோல் விதிகள் உணவு உற்பத்தியைத் தடுப்பதற்கும் பஞ்சம் பட்டினியை நீடிக்கச் செய்வதற்கும் சாதனங்கள் ஆயின.

இவ்வளவுடன் மக்கள் சுதந்திர அரசாங்கத்திடம் வெறுப்புக் கொள்ளவும் "பிரிட்டிஷ் ஆட்சியே பாதகமில்லை" என்று பகிரங்கமாகச் சொல்லவும் ஏதுவாயின.

முக்கியமாக இந்த நிலைமை சென்னை மாகாணத்தில் அதிக பயங்கரத் தோற்றத்தை அடைந்திருந்தது.

ஏனெனில், இங்குள்ள அதிகார வர்க்கத்தார் மற்ற மாகாணங்களில் உள்ளவர்களைக் காட்டிலும் அதிக திறமைசாலிகள்! அந்தத் திறமையையெல்லாம் கொள்முதல் முறைகளில் உபயோகித்தார்கள்! உபயோகித்து, மக்களின் உள்ளங்களில் பீதியையும் வெறுப்பையும் வளர்த்தார்கள்.

இவையெல்லாம் மேலிடத்திலுள்ள நம் மாபெருந் தலைவர்களுக்கு அவ்வளவாகத் தெரியவில்லை. புது டில்லியிலிருந்து அரசாங்கம் நடத்துகிறவர்கள் கிராமாந்தர மக்களுடன் கலந்து பழகுவதற்குச் சந்தர்ப்பம் பெறவில்லை.

மாகாண மந்திரிகளுக்குத் தெரிந்திருந்தது; தெரியாதவர்களுக்கும் எடுத்துச் சொல்லப்பட்டது. ஆனால் அவர்களையும் வேறுவிதமான பயம் பிடித்திருந்தது. "கண்ட்ரோலை எடுத்து விட்டால் உடனே நாட்டில் கொடிய பஞ்சம் தாண்டவமாடும்" என்று சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சொன்னார்கள். அவர்களுடைய ஆலோசனைக்கு மாறாக எதுவும் செய்வதற்கு மாகாண மந்திரிகள் பயந்தார்கள்.

சாதக பாதகங்களை நன்கு ஆராய்ந்து, சரியான காரியத்தைத் தைரியமாகச் செய்யக்கூடிய தலைவர் ஒருவர் தேவையாயிருந்தது.

கடவுளின் அருளால் அத்தகைய தலைவர் ஒருவர் சென்னை மாகாணத்துக்குக் கிடைத்தார்.

ராஜாஜி தம் ஆட்சியைத் தொடங்கும் போதே இரண்டு முக்கிய இலட்சியங்களை வெளியிட்டார். "(1) அரசாங்க நிர்வாகம் நேர்மையாக நடக்க வேண்டும்; (2) விவசாயம் மகிழ்ச்சிகரமான தொழில் ஆக வேண்டும்; இந்த இரண்டு காரியங்

களையும் செய்து விட்டால் நாமும் திருப்தி அடையலாம்; மக்களும் திருப்தி அடைவார்கள்'' என்று கூறினர்.

ராஜாஜி முதன் மந்திரி ஆன உடனேயே அரசாங்க நிர்வாகம் சீர்ப்பட்டு விட்டது என்ற நம்பிக்கை மக்களுக்கு ஏற்பட்டு விட்டது.

ஆனால் விவசாயத்தை எப்படி மகிழ்ச்சிகரமான தொழில் ஆக்கப் போகிறார் என்று அறிய ஆவலுடன் இருந்தோம்.

ராஜாஜி அதையும் செய்து காட்டி விட்டார்!

உணவுக் கண்ட்ரோலை ஒழித்தால்தான் விவசாயம் மகிழ்ச்சிகரமான தொழில் ஆக முடியும் என்று உணர்ந்து அதைக் காரியத்தில் நிறைவேற்றி வைத்து விட்டார்.

இவ்விதம் செய்வதற்கு முன் வந்த ராஜாஜியின் 'தைரியத்தை' நாட்டில் எத்தனையோ பேர் பாராட்டி விட்டார்கள்.

அதைக் குறித்து நாம் புதிதாக ஒன்றும் சொல்ல வேண்டியதில்லை. மேலும் ராஜாஜியின் தைரியம் உலகம் அறிந்த விஷயம்.

ராஜாஜியின் தைரியத்துக்குத் தைரியம் அளித்து உதவிய சென்னை மாகாண உணவு மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமண்யத்தையும், மற்றுமுள்ள பதினைந்து மந்திரிகளையுந்தான் இச் சந்தர்ப்பத்தில் நாம் முக்கியமாகப் பாராட்ட வேண்டும்.

சென்னை மந்திரி சபையின் யோசனைகளுக்குத் தடை சொல்லாமல் ஒப்புக் கொண்ட இந்திய சர்க்காரின் உணவு மந்திரி ஜனாப் கித்வாயையும் பிரதம மந்திரி நேருவையும் இன்னும் அதிகமாகப் பாராட்ட வேண்டும்.

ஜவாஹர்லால்ஜிக்குக் கண்ட்ரோல் விதிகளில் நம்பிக்கை அதிகம் உண்டு. கண்ட்ரோலுக்கு விரோதமாக யாராவது பேச்சு எடுத்தால் உடனே உதறி அடித்து விடுவார். பல தடவையில் நாம் இதைப் பார்த்திருக்கிறோம்.

அத்தகையவர், ராஜாஜியின் ஆலோசனையை மனமுவந்து உடனே ஒப்புக் கொண்டு சம்மதம் கொடுத்தது மிகப் பெரிய காரியம். அதற்காக இம்மாகாண மக்களின் சார்பில் ஜவாஹர்லால்ஜிக்குப் பல்லாண்டு கூறுகிறோம்.

அடுத்தபடியாக, ராஜாஜியின் தைரியமான நடவடிக்கைக்கு அடிப்படைக் காரணமாயிருந்தது எது என்பதையும் நாம் கவனிக்க வேண்டும். இம் மாகாணத்தின் மக்களின் மீது அவருக்குள்ள அசையாத நம்பிக்கைதான். சூழ்நிலை சரியாக அமைத்துக் கொடுத்தால் சென்னை மக்கள் நேர்மையாக நடந்து கொள்வார்கள் என்று அவர் திடமாக நம்பியிருப்பதுதான்.

சென்னை மாகாணத்தில் உணவுக் கண்ட்ரோல் ஒழிப்பு முடிவானது. இனி அது திரும்பி வரப் போவதில்லை என்பது நிச்சயம்.

உணவுக் கண்ட்ரோல் ஒழிப்பு வெற்றிகரமாக நடப்பதற்கு எல்லா முன் ஏற்பாடுகளையும் ராஜாஜி செய்திருக்கிறார்.

இம்மாகாணம் ஆறு மண்டலங்களாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. இவற்றில் ஐந்து மண்டலங்களில் விளையும் உணவுத் தானியம் அந்தந்த மண்டலத்தின் மக்களுக்குப் போதுமானது.

மலையாளம் - நீலகிரி மண்டலத்துக்கு மட்டும் அந்த மண்டலத்தில் விளையும் உணவு தானியம் போதாது. இதற்காகவே, வெளி மாகாணங்களிலிருந்தும் அயல் நாடுகளிலிருந்தும் வரும் தானியத்தில் இந்திய சர்க்கார் இந்த மாகாணத்துக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் தானியம் முழுவதையும் மலையாளத்துக்கே அனுப்பி விட ராஜாஜி ஏற்பாடு செய்திருக்கிறார்.

ஆகையால் கவலைக்குச் சிறிதும் இடம் இல்லை. இது ஒரு சோதனை என்றும், சோதனை தவறி விட்டால் மறுபடியும் கண்ட்ரோல் வரும் என்றும் கருத வேண்டியதேயில்லை.

## ஐக்கியமும் விபத்து ஆகலாம்!



ஆனால் புதிய ஏற்பாடு சுலபமாகவும் யாருக்கும் கஷ்டமின்றியும் அமுலுக்கு வரப் போகிறதா, சர்க்கார் அடிக்கடி தலையிட்டு அமுல் நடத்த வேண்டியிருக்குமா என்பது ஒன்றுதான் கேள்வி.

பொது மக்கள் பூரணமாக ஒத்துழைத்தால் புதிய ஏற்பாடு சுலபமாக அமுலுக்கு வந்து சீக்கிரமாக நிலைபெற்றுவிடும். ராஜாஜியும் மற்ற மந்திரிகளும் மக்களின் முன்னேற்றத்துக்கான வேறு திட்டங்களில் கவனம் செலுத்தலாம்.

மக்களின் ஒத்துழைப்பு பின்வரும் துறைகளில் கிடைக்க வேண்டும் :—

1. எந்தக் குடித்தனக்காரரும் ஒரு மாதத்துக்குத் தேவையான உணவுப் பொருளுக்கு மேலே சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. இதனால் கஷ்டமும் நஷ்டமுந்தானே ஒழிய லாபம் ஒன்றும் கிடையாது என்பதை நன்றாக உணர வேண்டும்.

2. உணவுப் பொருளை விரயம்செய்தல் பாதகம் என்பதை அனைவரும் உணர வேண்டும். கண்ட்ரோல் அமுலில் இருந்தபோது, கல்யாணம் முதலிய வைபவங்களில் விருந்தினர் தொகைக்குக் கட்டுப்பாடு இருந்தது. அதை இப்போது இன்னும் தீவிரமாக மக்களே கடைப்பிடிக்க வேண்டும். பின்னால் ஏற்படப் போகும் நன்மையை முன்னிட்டு இன்னும் ஒரு வருஷத்துக்கு விருந்து வைபவங்களைக் குறைத்துக் கொள்ள வேண்டும்.

3. வியாபாரிகளின் பொறுப்பு மிக மிக அதிகமானது. பின்னால் அதிக விலைக்கு விற்கலாம் என்று எண்ணித் தானியங்களைச் சேர்த்து வைப்பது பெரும் பாதகம். இந்தக் கொலைபாதகமான குற்றத்தை எந்த நேரத்திலும் சர்க்கார் தலையிட்டுத் தடுத்துவிடக் கூடும். அதற்கு இடமேயில்லாமல் வியாபாரிகள் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டும். நாட்டின் நலத்தையும் தங்கள் சொந்த நலத்தையும் கருதிச் சொற்ப லாபத்துக்கு அவ்வப்போது தானியங்களை விற்றுவிட முன் வர வேண்டும்.

4. விவசாயிகளின் கடமையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. முக்கியமாக விவசாயிகளின் தொல்லைகளைப் போக்கி அவர்களுக்கு உற்சாகம் அளிப்பதற்காகவே உணவுக் கண்ட்ரோலும் கொள்முதல் முறையும் ஒழிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் உணவு உற்பத்தியைப் பெருக்குவதில் விவசாயிகள் முழு மூச்சுடன் ஈடுபட வேண்டும். அத்துடன் தத்தம் குடும்பத்துக்கும் விவசாயத்துக்கும் வேண்டிய குறைந்த அளவு தானியத்தை வைத்துக் கொண்டு மற்றதையெல்லாம் விற்றுவிட முன் வர வேண்டும்.

5. ரயத்துவாரி முறை அமுலில் உள்ள இடங்களில் மிராசுதார்களும் பயிரிடுவோர்களும் இச்சமயம் வீண் சண்டைகளைக் கிளப்பிக் கொள்ளக் கூடாது. ராஜாஜி சர்க்கார் கூடிய விரைவில் தர்ம நியாயமான முறையில் நில உரிமை—குடி உரிமைப் பிரச்னைகளைத் தீர்த்து வைப்பார்கள் என்று நிச்சயமாக அவர்கள் நம்பலாம். அதுவரைக்கும் "இறைத்த தண்ணீரை வெள்ளம் கொண்டு போய்விடாது" என்ற நம்பிக்கையுடன் மிராசுதார்களும் பயிரிடும் குடிகளும் விவசாயத்தைப் பெருக்குவதில் முனைய வேண்டும். ஆங்காங்குள்ள அரசியல் வாதிகளும் மேற்படி சச்சரவுகளை அதிகமாக்க முற்படாமல், நேரும் சச்சரவுகளை அவ்வப்போது சமாதான முறையில் தீர்த்து வைக்க முயல வேண்டும்.

இம்மாதிரி அனைவரும் ஒத்துழைத்தால் இன்னும் ஒரு வருஷத்தில்,—ஏன், ஆறு மாதத்திற்குள்ளாகவே,—சென்னை மாகாணத்தில் உணவுப் பற்றாக்குறை பழைய கனவாய்ப் போய்விடும்.

உணவு உற்பத்தி செய்வோர், உணவு வாங்கிச் சாப்பிடுவோர் அனைவரும் கவலையும் பயமும் இன்றி ஆனந்த வாழ்க்கை நடத்தலாம்.

சென்னை மாகாணம் இந்தியா தேசத்துக்கு மறுபடியும் வழி காட்டிய பெருமையை அடையலாம்.

# வழிகாட்டுகிறது!

கசப்பு மருந்துக்குச் சர்க்கரைப் பூச்சு என்று சொல்லுவார்கள் அல்லவா!

அதுபோலவே உலக வல்லரசுகளின் ராஜதந்திரிகள் தாங்கள் செய்யும் விபரீதமான காரியங்களை மறைப்பதற்காக அவற்றிற்கு அழகான, காதுக்கு இனிமையான பெயர் கொடுத்து விடுவார்கள்.

வல்லரசுகள் இதற்கு முன் எத்தனையோ சமாதான உடன்படிக்கைகள் செய்து கொண்டது உண்டு. ஆனால் அந்த உடன்படிக்கைகளே பிறகு கோரமான யுத்தத்துக்கு விதைகளாக அமைந்தன.

முதலாவது உலக மகா யுத்தத்துக்குப் பிறகு ஏற்பட்ட வர்செயில்ஸ் உடன்படிக்கையே இரண்டாவது மகா யுத்தத்துக்கு அஸ்திவாரமாயிற்று எனலாம். கொரியாவில் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தம் போரில் முடிந்ததையும் பார்த்தோம்.

சில மாதங்களுக்கு முன் வல்லரசுகள் ஜப்பானுடன் செய்து கொண்ட சமாதான உடன்படிக்கையிலும் போர் விதைகள் அடங்கியுள்ளன என்ற காரணத்தினாலேயே இந்தியா அந்த உடன்படிக்கையில் கையெழுத்திட மறுத்து விட்டது. சில தினங்களுக்கு முன் ஜெர்மனி சம்பந்தமாக வல்லரசுகள் செய்து கொண்டுள்ள உடன்படிக்கையிலும் உலகத்தை உருக்குலைக்கும் விஷ வித்துக்கள் அடங்கியிருக்கின்றன.

இத்தகைய உடன்படிக்கைகளுக்கும் இப்போது பாரத நாட்டுக்கும் ஜப்பானுக்கும் ஏற்பட்டுள்ள உடன்படிக்கைக்கும் உள்ள வேற்றுமையைக் கவனிப்பவர்கள் மேற்படி உண்மையைத் தெரிந்து கொள்ளலாம்.

ஜப்பான் யுத்தத்தில் இறங்கியதால் ஏராளமான இந்திய வீரர்கள் பலியாயினர். இந்தியர்களுக்கு மகத்தான பொருள் நஷ்டமும் துன்பமும் ஏற்பட்டன. ஏன், வங்காளத்தில் பஞ்சம் ஏற்பட்டு லட்சக் கணக்கில் மக்கள் மடிந்தது மேற்படி யுத்தத்தின் விளைவு அல்லவா!

எனவே, இச் சந்தர்ப்பத்தில் இந்தியா ஜப்பானிடமிருந்து நஷ்டஈடு கேட்டிருக்கலாம்; எதிர்காலத்தில் ஜப்பான் தேசத்தினால் பாரத நாட்டுக்கு எவ்வித இடையூறும் ஏற்படாமல் இருப்பதற்காக மற்ற நாடுகளைப் போல நியாயமாகவோ அநியாயமாகவோ பல நிபந்தனைகளை விதித்திருக்கலாம்.

ஆனால் இந்திய சர்க்கார் ஜப்பானிடமிருந்து நஷ்டஈடு கேட்கவில்லை; நிபந்தனைகளும் விதிக்க

வில்லை. இந்தியாவில் உள்ள ஜப்பானியரின் சொத்துக்களைக் கூட எவ்வித நிபந்தனையுமின்றித் திருப்பிக் கொடுத்து விட்டார்கள்.

வல்லரசுகள் செய்து கொள்ளும் சமாதான நேச உடன்படிக்கைகள் உண்மையிலேயே சமாதான நோக்கத்தையும் நேசப்பான்மையையும் அடிப்படையாகக் கொண்டிருக்குமாயின், உலக நாடுகளை ஆட்டி வைக்கும் பல கொடிய இன்னல்கள் நீங்குவதற்கு வழி உண்டாகும்.

நிரந்தரமான அமைதிக்கும் பரஸ்பர நேசத்துக்கும் குந்தகம் விளைவிப்பதில்லை என்று உறுதி கூறி இந்தியாவும் ஜப்பானும் இப்போது செய்து கொண்டுள்ள உடன்படிக்கை மற்ற வல்லரசுகளுக்கு வழி காட்டியாக விளங்கும்.

# தமிழ்க் களஞ்சியம்

ரஸிகமணி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் சென்ற ஒன்றரை ஆண்டு காலமாக உடல் நலிவு அடைந்திருந்தார்கள். இதைக் கேள்வியுற்ற தமிழ் அன்பர்கள் பலரும் கவலையில் ஆழ்ந்திருந்தார்கள். தற்போது ரஸிகமணி அவர்களின் உடல் நிலை சிறிது அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்னும் செய்தி தமிழ் அன்பர்களுக்கு ஓரளவு ஆறுதல் அளிக்கும்.

ரஸிகமணியின் உடல்நலம் குன்றியிருந்த போதிலும் அவர்களுடைய உற்சாகத்துக்கு எந்தவிதக் குறைவும் ஏற்படவில்லை. "கம்பர் தரும் காட்சி"க் கட்டுரைகளைத் தொடர்ச்சியாக எழுத இயலாத போதிலும், முன் பின்னாக எழுதிப் பூர்த்தி செய்து விட்டார்கள்.

தற்போது வேறொரு சிறந்த தமிழ்ப் பணியை ரஸிகமணி அவர்கள் தொடங்கியிருக்கிறார்கள். தமிழ் மொழியில் பத்தரைமாற்றுப் பொன்னை யொத்த எத்தனை எத்தனையோ தனித் தமிழ்ப் பாடல்கள் இருக்கின்றன. இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தமிழ்க் கவிஞர்கள் இயற்றி அளித்தவை. அவற்றில் நஷ்டமானவை போக மிச்சமுள்ளவையே ஆயிரக் கணக்கில் தேறும். நம் ரஸிகமணி அவர்கள் தம் ஆயுட் காலத்தில் பெரும் பகுதியை அத்தகைய தனிப் பாடல்களை ஆராய்ந்து தேர்ந்தெடுப்பதில் செலவிட்டிருக்கிறார்கள். நூற்றுக் கணக்கான தனிப் பாடல்களைச் சேகரித்து வைத்திருக்கிறார்கள். அந்தப் பாடல்களில் சிலவற்றைத் தகுந்த விளக்கக் குறிப்புக்களுடன் "கல்கி"யில் வெளியிட வேண்டும் என்று நாம் கோரியதற்கு ரஸிகமணி டி. கே. சி. இணங்கி எழுத முன் வந்திருக்கிறார்கள். "தமிழ்க் களஞ்சியம்" என்னும் தலைப்பில் அக்கட்டுரைகள் இந்த இதழிலிருந்து ஆரம்பமாகின்றன. "கல்கி" நேயர்கள் அதிர்ஷ்டசாலிகள் என்பதில் ஐயம் என்ன!

ரஸிகமணி டி. கே. சி. நீடூழி திடகாத்திரத்துடன் வாழ்ந்து தமிழ்ப்பணி புரிந்து வர அருள் புரியுமாறு இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

## "பாரதி காட்டிய பாதை"

பாரதியார் கட்டுரைப் போட்டியின் கடைசித் தேதியான மே மாதம் 31-ந் தேதி வரைக்கும் 1,356 கட்டுரைகள் வந்திருக்கின்றன. கட்டுரைகளின் தொகையை மட்டும் வைத்துக் கொண்டு பார்த்தால், போட்டி மகத்தான வெற்றி அடைந்ததென்றே சொல்ல வேண்டும்.

கட்டுரைகளின் பரிசீலனை ஆரம்பமாகி நடந்து வருகிறது. பரிசுகளுக்குரிய கட்டுரைகளை இம்மாத முடிவுக்குள் அறிவிப்பது சாத்தியமாயிருக்கும் என்று நம்புகிறோம்.

* * *

## மற்றொரு கட்டுரைப் போட்டி

### (மாணவர்களுக்கு மட்டும்)

இந்த மாதத்தில் தினப் பத்திரிகைகளில் வெளியான சில செய்திகளை ஆதாரமாகக் கொண்டு இந்த வாரத்து அட்டைப் படத்தை நமது சித்திரக்காரர் தயாரித்து இருக்கிறார். சிறுவர்களின் கவனத்தை அவ்வளவாகக் கவர்ந்து வெவ்வேறு உணர்ச்சிகளை உண்டாக்கியிருக்கும் செய்திகள் யாவை என்பதை எளிதில் ஊகித்து அறியலாம். மேற்படி காட்சியையும் அதில் காணும் சிறுவர்களின் முகபாவ உணர்ச்சிகளையும் ஆதாரமாக வைத்துக் கொண்டு "கல்கி"ப் பத்திரிகையில் சுமார் இரண்டு பக்கம் வரும்படியாகக் கட்டுரை எழுதி அனுப்பக் கோருகிறோம். இந்தப் போட்டியில் ஹைஸ்கூல் மாணவர்களும் கல்லூரி மாணவர்களும் கலந்து கொள்ளலாம். (மாணவர்கள் என்பதில் மாணவிகளும் உள்ளிட்டவர்கள்.) எல்லாவற்றிலும் சிறந்த கட்டுரைக்கு முதல் பரிசு ரூ. 30ம். அடுத்தபடியான நல்ல கட்டுரைக்கு இரண்டாவது பரிசு ரூ. 20-ம் அளிக்கப்படும். ஜூன் மாதம் முப்பதாம் தேதிக்குள் கட்டுரைகள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். தயவுசெய்து உறையின் மேல் "மாணவர் கட்டுரைப் போட்டி" என்று குறிப்பிடக் கோருகிறோம்.

செ ன் னை யி ன்  யோ க ம் !



1 உணவுக்கட்டுப்பாடுகள் ஒழித்த ராஜாஜியைப் பாராட்ட மக்கள் போட்டி போடுகின்றனர்!!
புஷ்பச் செடிகளைப் பயிரிட்டு நிலங்களை வீணாக்க வேண்டாம் உணவுத் தானியப்
பம்பாய்
2 இந்தியாவின் பார்வை முழுதும் நம்மையே நோக்கி யிருக்கிறது.
3 ஸ்ரீமதி கண்ட்ரோலும் அதன் அருமைக்குழந்தைகளும் 'தப்பினோம் பிழைத்தோம்' என்று அலறி ஓடுகின்றன.
கள்ளமார்க்கட்
கண்ட்ரோல்
4 இனி நம் விவசாயிகள் உற்சாகத்துடன் உழைத்துப் பாடுபட்டால்.....
5 பூமாதேவியும் தன் அருமை மக்களுக்கு மனமுவந்து உணவுச்செல்வத்தை அள்ளி வழங்கு வாள்!




## அத்தியாயம் 32

# பிரம்மாவின் தலை!

**வ**ந்தியத்தேவன் குடந்தை ஜோதிடரின் வீட்டுக்குள் இரண்டாம் முறையாகப் பிரவேசித்தபோது அவனுடைய உள்ளத்தில் ஓர் அதிசயமான இன்ப உணர்ச்சி உண்டாயிற்று. அந்தச் சிறிய வீட்டுக்குள்ளேதான் முதன் முதலாக அவன் இளைய பிராட்டி குந்தவையைப் பார்த்தான். அவளுடைய செந்தாமரை வதனத்தையும், வியப்பினால் விரிந்த கரிய பெரிய கண்களையும் பார்த்துத் திகைத்து நின்றான். அவளுடைய தேனினுமினிய இன்குரல் அவன் செவியில் விழுந்ததும் அங்கேதான். இந்த நினைவுகள் எல்லாம் அலை மோதிக் கொண்டு அவன் உள்ளத்தில் பொங்கி வந்தன. அவற்றினால் அவன் செவிகள் இனித்தன; உள்ளம் இனித்தது; உடல் முழுதுமே இனித்துச் சிலிர்த்தது!

சோதிடர் அப்போதுதான் மாலை வேளைப் பூஜைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். இவனைப் பார்த்ததும், "வா, அப்பனே, வா! வாணர் குலத்து வல்லத்தரையன் தானே?" என்றார்.

"ஆம், சோதிடரே! உம் ஜோசியம் முன் பின்னாக இருந்தாலும், உம்முடைய ஞாபக சக்தி பிரமாதம்!" என்றான் வந்தியத்தேவன்.

"தம்பி! சோதிட சாஸ்திரம் பயில்வதற்கு ஞாபக சக்தி மிக அவசியம். கிரகங்கள், நட்சத்திரங்கள், திசைகள், புக்திகள், யோகங்கள்,—இவை லட்சம் விதமான சேர்க்கை உள்ளவை. அவ்வளவையும் மனத்தில் வைத்துக் கொண்டு, வருஷம், மாதம், நாள், நாழிகை, விநாடி, ஒரு விநாடியில் நூற்றில் ஒரு பங்கு நேரம்,—இவ்வளவையும் கணக்கிட்டுப் பார்த்தல்லவா சொல்ல வேண்டும்! போகட்டும்; என் ஜோசியம் முன் பின்னாக இருந்தாலும் என்றாயே? அதன் பொருள் என்ன? நான் உனக்குச் சொன்னது ஒன்றும் பலிக்கவில்லையா?"

"அதையும் உங்கள் ஜோசியத்திலேயே கண்டுபிடித்துக் கொள்ள வழி இல்லையா?"

"உண்டு, உண்டு! ஜோசியத்தினாலும் கண்டு பிடிக்கலாம்; ஊகத்தினாலும் கண்டு பிடிக்கலாம். உனக்கு நான் கூறியவை பலித்துத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் நீ திரும்பவும் இந்தக் குடிசைக்குள் வருவாயா?"

"ஆமாம்; ஆமாம். உம்முடைய சோதிடம் பலிக்கத்தான் செய்தது."

"அப்படிச் சொல்லு! எந்தவிதத்தில் பலித்தது, அப்பனே?"

"நீர் எனக்குச் சொன்னது அப்படியே பலித்தது. 'நீ போகிற காரியம் நடந்தால் நடக்கும்; நடக்காவிட்டால் நடக்காது' என்றீர். அந்தப்படியே நடந்தது. 'நடந்தது' என்று நான் சொல்வது கூடப் பிசகு. என்னைக் கண்டவுடனேயே ஓட்டம் பிடித்து ஓடிற்று!"

"தம்பி! நீ பெரிய வேடிக்கைக்காரனாயிருக்கிறாய்!"

"உண்மையான வார்த்தை. நான் வேடிக்கைக்காரன்தான்; அத்துடன் கொஞ்சம் கோபக்காரன்."

"இந்தக் குடிசைக்குள் வரும்போது கோபத்தை வெளியில் மூட்டை கட்டி வைத்து விட்டு வர வேண்டும்."

"அப்படிச் செய்யலாம் என்றுதான் பார்த்தேன். ஆனால் உம்முடைய சீடனை வீட்டு வாசலில் காணவில்லை. கோபமூட்டையைத் திண்ணையில் வைத்தால் யாராவது அடித்துக் கொண்டு போய் விட்டால் என்ன செய்கிறது என்று உள்ளே கொண்டு வந்து விட்டேன். உம்முடைய சீடன் எங்கே, சோதிடரே! போன தடவை அவன் என்னை வாசலில் தடுத்து நிறுத்தப் பார்த்தது அப்படியே என் நினைவில் இருக்கிறது!"

"இன்றைக்கு ஐப்பசி அமாவாசை அல்லவா? அதற்காக அவன் கொள்ளிடக் கரைக்குப் போயிருப்பான்."

"அமாவாசைக்கும் கொள்ளிடக் கரைக்கும் என்ன சம்பந்தம்?"

"கொள்ளிடக் கரையில் காளாமுகர்களின் மகா சங்கம் இன்று நடைபெறுகிறது. என் சீடன் காளாமுகத்தைச் சேர்ந்தவன்."

"சோதிடரே! நான் சைவ மதத்தையே விட்டு விடலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்."

"விட்டு விட்டு......"

"உமது சிநேகிதர் ஆழ்வார்க்கடியார் நம்பி இருக்கிறாரே,......"

"திருமலையைச் சொல்கிறாயாக்கும்!"

"ஆம்; அவரிடம் தீட்சை பெற்று உடம்பெல்லாம் நாமத்தைப் போட்டுக் கொண்டு வீர வைஷ்ணவனாகி விடலாம் என்று உத்தேசிக்கிறேன்."

"அது ஏன் அப்படி?"

"காளாமுக சைவர்கள் சிலரைப் பார்த்தேன். இங்கே வருகிற வழியிலே கூடப் பார்த்தேன். அவர்களையும் அவர்கள் வைத்திருக்கும் மண்டை ஓடுகளையும் பார்த்த பிறகு சைவத்தை விட்டு விடலாம் என்று தோன்றுகிறது."

"தம்பி! எத்தனையோ போர்க்களங்களைப் பார்த்திருக்கும் உனக்கு மண்டை ஓடுகளைக் கண்டு என்ன பயம்?"

"பயம் ஒன்றுமில்லை; அருவருப்புத்தான். போர்க்களத்தில் பகைவர்களைக் கொல்வதற்கும் மண்டை ஓடுகளை மாலையாகப் போட்டுக்கொள்வதற்கும் என்ன சம்பந்தம்?"

"உன்னுடைய எஜமானர் ஆதித்த கரிகாலர் வீர பாண்டியனுடைய தலையை வெட்டி எடுத்துக்கொண்டு வந்து ஊர்வலம் விடவில்லையா?"

"அவர் ஏதோ சபதம் செய்திருந்தபடியால் அவ்விதம் செய்தார். அதற்காகப் பிறகு எவ்வளவோ வருத்தப்பட்டார். அவர்கூட மண்டை ஓட்டை மாலையாகப் போட்டுக் கொள்ளவில்லை; கையிலும் எடுத்துக் கொண்டு திரியவில்லையே? காளாமுகர்கள் எதற்காக அப்படிச் செய்கிறார்கள்?"

"வாழ்க்கை அநித்தியம் என்பதை மறந்து விடாமலிருப்பதற்காக அவர்கள் அவ்வாறு செய்கிறார்கள். நீயும் நானும் திருநீறு பூசிக் கொள்கிறோமே, அது மட்டும் என்ன? இந்த மனித உடம்பு நிலையானது அல்ல, ஒரு நாள் சாம்பராகப் போகிற தென்பதை மறந்து விடாமலிருப்பதற்குத்தானே திருநீறு பூசிக் கொள்கிறோம்?"

"மனித தேகந்தான் அநித்தியம் என்பது சரிதான். இது எரிந்து சாம்பராகும்; அல்லது மண்ணோடு மண்ணாகும். சிவபெருமானுடைய திருமேனி அப்படியல்லவே! பரமசிவன் ஏன் கையில் மண்டை ஓட்டை வைத்திருக்கிறார்?"

"தம்பி! சிவபெருமானுடைய கையில் உள்ள மண்டை ஓடு ஆணவத்தைக் குறிக்கிறது. ஆணவத்தை வென்றால் ஆனந்த நிலை ஏற்படும் என்பதைக் காட்டுகிறது. சிவ பெருமான் கையில் மண்டை ஓட்டுடன் ஆனந்த நடனம் செய்கிறார் அல்லவா?"

"மண்டை ஓடு எப்படி ஆணவத்தைக் குறிக்கும், எனக்குத் தெரியவில்லையே?"

"உனக்குத் தெரியாதது இன்னும் எவ்வளவோ இருக்கிறது, தம்பி! மண்டை ஓடு ஆணவத்தைக் குறிப்பது எப்படி என்பதை மட்டும் இப்போது தெரிந்து கொள். பிரம்ம தேவனும் திருமாலும் ஒரு சமயம் கர்வம் கொண்டார்கள். 'நான் பெரியவன்; நான்தான் பெரியவன்' என்று சண்டையிட்டார்கள். சிவன் அவர்களுக்கு நடுவில் வந்தார். 'என்னுடைய சிரசை ஒருவரும் என்னுடைய பாதத்தை ஒருவரும் கண்டு பிடித்துக் கொண்டு வாருங்கள். யார் பார்த்துவிட்டு முதலில் வருகிறாரோ, அவர் தான் உங்களில் பெரியவர்' என்றார். மகாவிஷ்ணு வராக உருவங் கொண்டு சிவனுடைய பாதங்களைப் பார்ப்பதற்குப் பூமியைக் குடைந்து கொண்டு சென்றார். பிரம்மா அன்னப் பறவையின் உருக் கொண்டு வானத்தில் பறந்து சென்றார். திருமால் திரும்பி வந்து சிவனுடைய அடியைக் காண முடியவில்லை என்று உண்மையை ஒப்புக் கொண்டார். பிரம்மா திரும்பி வந்து சிவனுடைய முடியைப் பார்த்து விட்டதாகப் பொய் சொன்னார்! அப்போது சிவன் பிரம்மாவுக்கிருந்த ஐந்து தலைக

ளில் ஒன்றைக் கிள்ளி எடுத்து அவரைத் தண்டித்தார். ஆணவம் காரணமாகப் பிரம்மா சண்டை யிட்டுப் பொய் சொன்னபடியால் அவருடைய தலை ஆணவத்துக்குச் சின்னமாயிற்று..."

வந்தியத்தேவன் எதையோ நினைத்துக் கொண்டவன் போல் இடி இடி என்று சிரித்தான்.

"என்னத்தைக் கண்டு இப்படிச் சிரிக்கிறாய், தம்பி!"

"ஒன்றையும் கண்டு சிரிக்கவில்லை. ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அதனால் சிரித்தேன்."

"அது என்ன விஷயம்? இரகசியம் ஒன்றுமில்லையே?"

"இரகசியம் என்ன? பிரம்மாவைத் தண்டித்ததுபோல் என்னையும் தண்டிப்பதா யிருந்தால், குறைந்த பட்சம், பதினாயிரம் தலையாவது எனக்கு இருந்தால்தான் சரிக்கட்டி வரும்! அதை எண்ணித்தான் சிரித்தேன்."

"அத்தனை பொய்கள் சொல்லியிருக்கிறாயாக்கும்!"

"ஆம், சோதிடரே! அது என் சாதக விசேஷம் போலிருக்கிறது. பொன்னியின் செல்வரைச் சந்தித்த பிறகு உண்மையே சொல்வதென்று தீர்மானித்திருந்தேன். ஒரு தடவை ஒரு முக்கியமான உண்மையையும் சொன்னேன். அதைக் கேட்டவர்கள் நகைத்தார்கள்; ஒருவரும் நம்பவில்லை!"

"ஆம்; தம்பி! காலம் அப்படிக் கெட்டுப் போய்விட்டது. இந்த நாளில் பொய்யையே ஜனங்கள் நம்புவதில்லை; உண்மையை எப்படி நம்பப் போகிறார்கள்?"

"உம்முடைய ஜோதிடத்தின் கதியும் அப்படித்தானாக்கும்! சோதிடரே! இளவரசர் அருள்மொழி வர்மரைப் பற்றி நீர் கூறியது நினைவிருக்கிறதா? வானத்திலே வட திசை அடிவாரத்தில் நிலைத்து நின்று ஒளிரும் துருவ நட்சத்திரம் போன்றவர் பொன்னியின் செல்வர் என்று நீர் சொல்லவில்லையா?"

"சொன்னேன்; அதனால் என்ன?"

"அவரைப் பற்றிய செய்தியை நீர் கேள்விப் படவில்லையா?"

"கேள்விப்படாமல் எப்படி இருக்க முடியும்? நாடு நகர மெல்லாம் அதே பேச்சாகத்தானே இருக்கிறது?"

"துருவ நட்சத்திரம் கடலில் மூழ்கி விட்டதென்று நீர் கேள்விப் படட துண்டா?"

"துருவ நட்சத்திரம் கடலில் மூழ்காது. ஆனால் அந்த நிலை குலையா நட்சத்திரத்தையும் மேகங்கள் சில சமயம் மறைக்கலாம் அல்லவா? இன்றைக்குக் கூட வடதிசையில் மேகங்கள் சூழ்ந்திருக்கின்றன. இன்று இரவு நீர் எவ்வளவு முயன்றாலும் துருவ நட்சத்திரத்தைக் காண முடியாது. அதனால் அந்த நட்சத்திரம் இல்லாமற் போய் விடுமா?"

"அப்படியா சொல்கிறீர்? பொன்னியின் செல்வரைப் பற்றிய உண்மையான செய்தி ஏதாவது உமக்குத் தெரியுமா?"

"எனக்கு எப்படித் தெரியும்? நீதான் அவருடன் கடைசியாகக் கடலில் குதித்தாய் என்று பேச்சா யிருக்கிறது. தெரிந்திருந்தால், உனக்கு அல்லவா தெரிந்திருக்க வேண்டும்? உன்னைக் கேட்கலாம் என்று எண்ணி யிருந்தேன்."

வந்தியத் தேவன் பேச்சை மாற்ற விரும்பி, "சோதிடரே! வால் நட்சத்திரம் இப்போது எப்படி இருக்கிறது?" என்று வினவினான்.

"மிக மிக நீளமாகப் பின்னிரவு நேரங்களில் தெரிகிறது. இனிமேல் நீளம் குறைய வேண்டியதுதான். தூமகேதுவினால் விபத்து ஏதேனும் ஏற்படுவதா யிருந்தால், அதி சீக்கிரத்தில் அது ஏற்பட்டாக வேண்டும். கடவுளே! இராஜ குலத்தில் யாருக்கு என்ன நேரிடுமோ என்னமோ!" என்றார் சோதிடர்.

வந்தியத் தேவனுடைய உள்ளம் அதி வேகமாக அங்குமிங்கும் பாய்ந்தது. தஞ்சையில் பாரிச வாயு பீடித்துப் படுத்த படுக்கையா யிருக்கும் சுந்தர சோழரும், நாகைப்பட்டினத்தில் நடுக்கு சுரம் வந்து கிடக்கும் பொன்னியின் செல்வரும், கடம்பூர் மாளிகையில் நந்தினியைச் சந்திக்கப் போகும் ஆதித்த கரிகாலரும், இராஜ்யத்துக்கு ஆசைப் பட்டு மக்களின் கோபத்துக்குப் பாத்திரமாகி யிருக்கும் மதுராந்தகரும், கையில் கொலை வாளை வைத்துக்கொண்டு கொஞ்சும் நந்தினியும் அவனுடைய உள்ளத்தில் வரிசையாகப் பவனி வந்தார்கள்.

"அதெல்லாம் போகட்டும், சோதிடரே! இராஜ குலத்தாரின் விஷயம் நமக்கு என்னத்திற்கு? நான் இப்போது மேற்கொண்டு போகும் காரியம் எப்படி முடியும், சொல்லுங்கள்!"

"முன்னே உனக்குச் சொன்னதைத்தான் இப்போதும் சொல்ல வேண்டி யிருக்கிறது. அப்பனே! எத்தனையோ விபத்துக்கள் உனக்கு வரும்; அவற்றையெல்லாம் வெற்றி கொள்வதற்கு எதிர்பாராத உதவிகளும் உனக்குக் கிடைக்கும்!" என்றார் சோதிடர்.

இப்போது வாசலில் வந்து கொண்டிருப்பது விபத்தா, உதவியா என்று வந்தியத்தேவன் எண்ணமிட்டான். ஏனெனில், அச்சமயம் வாசலில் ஆடவர்களின் குரல்களுடன் பெண்களின் குரல்களும் கேட்டன. இருவரும் வாசற்புறத்தை நோக்கினார்கள்.

மறு நிமிடம் வானதி தேவியும் அவளுடைய பாங்கியும் உள்ளே வந்தார்கள்.

வந்தியத்தேவன் எழுந்து நின்று மரியாதையுடன் “தேவி! மன்னிக்க வேண்டும்! தாங்கள் இங்கே வரப்போகிறீர்கள் என்று தெரிந்திருந்தால், நான் வந்திருக்க மாட்டேன்!......” என்றான்.

## அத்தியாயம் 33

# வானதி கேட்ட உதவி

“ஐயா! என்னிடம் ஏன் அவ்வளவு கோபம்? தங்களுக்கு நான் என்ன தீங்கு செய்தேன்?” என்ற கொடும்பாளூர் இளவரசியின் தீனமான குரல் வந்தியத் தேவனை உருக்கி விட்டது. இந்தப் பெண்ணிடம் தான் உண்மையில் எதற்காகக் கோபங் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. பூங்குழலி ஒரு கணம் அவன் மனக்கண் முன் வந்து மறைந்தாள். அவளுக்காக இந்தப் பெண்ணிடம் கோபங்கொள்ளுவது என்ன நியாயம்?

“அம்மணி! மன்னிக்க வேண்டும். அந்தமாதிரி ஒன்றும் நான் சொல்லவில்லை. தாங்கள் சோதிடரைப் பார்த்துவிட்டுப் போகும் வரையில் நான் வெளியில் காத்திருந்திருப்பேன் என்றுதான் சொன்னேன். எனக்கு ஒன்றும் அவசரமில்லை. இப்போதுகூட......”

“தாங்கள் வெளியேற வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. தங்களுக்கு அவசரமில்லை என்று அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். உண்மையில் நான் இங்கே சோதிடரைப் பார்க்க வரவில்லை. இவருடைய சோதிடத்தில் எனக்குக் கொஞ்சங்கூட நம்பிக்கை இல்லாமற் போய் விட்டது!......”

“தேவி! தங்கள் சித்தம் என் பாக்கியம்! ஒருகாலத்தில் என் சோதிடம் பொய்யாகவில்லை என்பதைத் தாங்களே உணர்வீர்கள். உணர்ந்து, இந்த ஏழையைப் பாராட்டுவீர்கள்!” என்றார் சோதிடர்.

“அப்போது பார்த்துக் கொள்ளலாம்!” என்று வானதி கூறிவிட்டு வந்தியத் தேவனைப் பார்த்து, “ஐயா! நான் தங்களைப் பார்க்கத்தான் இங்கே வந்தேன். வழியில் தாங்கள் குதிரை மீது சென்றதைப் பார்த்தேன். நின்று விசாரிப்பீர்கள் என்று நினைத்தேன். பராமுகமாகப் போய் விட்டீர்கள்! அதைப்பற்றி நான் அதிகமாக ஆச்சரியப் படவில்லை. இந்த அநாதைப் பெண்ணிடம் அவ்வளவு அக்கறை எதற்காக இருக்க வேண்டும்?” என்றாள்.

வந்தியத் தேவனுடைய கண்ணில் கண்ணீர் வந்து விடும் போலிருந்தது.

“தேவி! இது என்ன வார்த்தை? கொடும்பாளூர் பராந்தக சிறிய வேளாரின் செல்வப் புதல்வி, தென் திசைச் சேநாதிபதி பூதிவிக்கிரம கேசரியின் வளர்ப்புக் குமாரி, பழையாறை இளைய பிராட்டியின் அந்தரங்கத்துக்கு உகந்த தோழி, இத்தகைய தங்களை அநாதைப் பெண் என்று யார் ஒப்புக் கொள்வார்கள்?—பாதையில் நின்று விசாரிப்பது மரியாதைக் குறைவாயிருக்குமென்று வந்து விட்டேன். வேறொன்றுமில்லை. என்னால் ஏதாவது ஆக வேண்டிய காரியம் இருந்தால்...”

“ஆம், ஐயா! தங்களால் ஆக வேண்டிய காரியம் அவசியம் இருக்கிறது. தங்களிடம் ஒரு முக்கியமான உதவி கோருவதற்காகத் தான் இந்த வீட்டுக்குள் நான் வந்தேன்...”

“சொல்லுங்கள்; என்னால் முடியக் கூடிய காரியமாயிருந்தால்...”

“தங்களால் முடியாத காரியம்கூட ஒன்று இருக்க முடியுமா, என்ன? இலங்கைப் பிரயாணத்தின் போது தங்களுக்கு நேர்ந்தவற்றையெல்லாம் ஓரளவு நானும் கேட்டறிந்திருக்கிறேன். நான் கோரும் உதவியை அளிப்பதாக முதலில் வாக்குத் தர முடியுமா?”

வந்தியத்தேவன் தயக்கத்துடன் “தேவி! உதவி எத்தகையது என்று சொன்னால் நல்லது!” என்றான்.

“ஆம்; தங்களை ஏமாற்றி நான் வாக்குறுதி பெறக் கூடாதுதான். ஆகையால் காரியத்தைச் சொல்லி விடுகிறேன். சோதிடருக்கும் தெரியலாம்; அதனால் பாதகம் இல்லை. நான் புத்த தர்மத்தை மேற்கொண்டு பிக்ஷுணி ஆகி விடுவது என்று தீர்மானித்திருக்கிறேன்......”

"என்ன? என்ன?"
"இது என்ன வார்த்தை?"
"கூடவே கூடாது!"
"உலகம் பொறுக்காது!"
"நடவாத காரியம்!"

இவ்வாறெல்லாம் சோதிடரும் வந்தியத்தேவனும் மாற்றி மாற்றிச் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, வானதி, "ஆம்; புத்த சந்நியாசினி ஆவதென்று முடிவு செய்து விட்டேன். அதில் ஏன் உங்களுக்கு அவ்வளவு ஆட்சேபம்? தவறு என்ன? பழந் தமிழ் நாட்டில் எத்தனையோ பெண்கள் துறவறம் மேற்கொண்டதில்லையா? மாதவியின் புதல்வி மணிமேகலை துறவறம் நடத்தித் தெய்வத் தன்மை பெறவில்லையா? 'மணிமேகலா தெய்வம்' என்று அவளை நாம் இன்று போற்றவில்லையா? அவ்வளவு பெரிய ஆசையெல்லாம் எனக்குக் கிடையாது. இந்தப் பயனற்ற வாழ்க்கையை முடித்துக் கொள்ள முயன்றேன். அதில் தவறி விட்டேன். கடவுளுடைய விருப்பம் நான் உயிரோடு இன்னும் சில காலம் இருக்க வேண்டும் என்பது போலும். அப்படி இருக்கக் கூடிய காலத்தைப் புத்த மடம் ஒன்றில் சேர்ந்து ஜீவ காருண்யத் தொண்டு புரிந்து கழிக்க விரும்புகிறேன். இதற்குத் தாங்கள் எனக்கு உதவி செய்யத் தயங்க மாட்டீர்கள் அல்லவா?" என்றாள்.

வந்தியத்தேவன் மனத்தில் ஒரு சிறிய சந்தேகம் உதித்தது. அது அவனைத் திடுக்கிடச் செய்தது.

"தேவி! தங்கள் தீர்மானம் நியாயமன்று. எனினும் அதைச் சொல்லும் உரிமை எனக்குக் கிடையாது. தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள் தங்களுக்கு அதைப்பற்றி யோசனை சொல்ல வேண்டும். தங்கள் பெரிய தந்தை சேநாதிபதி பூதி விக்கிரமகேசரி கூடிய சீக்கிரம் திரும்பி வரப் போகிறார் என்று தெரிகிறது......"

"ஐயா! நான் யாருக்காகவும் காத்திருக்கப் போவதில்லை; யாருடைய யோசனையையும் கேட்கப் போவதுமில்லை. தீர்மானமாக முடிவு செய்து விட்டேன். தங்களுடைய உதவியைக் கோருகிறேன்......"

"இது விஷயத்தில் நான் என்ன உதவி செய்யக்கூடும், தேவி!"

"சொல்லுகிறேன். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போவதற்காக நான் புறப்பட்டேன். அங்கே சென்று புத்த குருமார்களை அடுத்துத் தீட்சை பெற்றுக் கொள்ள எண்ணிக் கிளம்பினேன். வழித் துணைக்குத் தாங்கள் என்னுடன் நாகைப் பட்டினம் வரையில் வர வேண்டும். அதுவே நான் கோரும் உதவி!"

வந்தியத் தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கொடும்பாளூர் இளவரசி இலேசுப்பட்டவள் அல்ல. நாமும் இளைய பிராட்டியும் பேசிக் கொண்டது அரைகுறையாக இவள் காதில் விழுந்திருக்க வேண்டும். தன்னிடம் முழு விவரங்களையும் தெரிந்து கொள்ளப் பார்க்கிறாள். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போகப் புறப்பட்டது இளவரசரை அங்கே சந்திக்கும் நோக்கத்துடனே தான்! அதற்கு ஒரு நாளும் நான் உடந்தையாயிருக்க முடியாது.

"அம்மணி! ரொம்பவும் மன்னிக்க வேண்டும். தாங்கள் கோரும் உதவி என்னுடைய சக்திக்கு அப்பாற்பட்டது."

"இது என்ன விந்தை? ஈழ நாட்டுக்குச் சென்று எத்தனை எத்தனையோ அற்புதங்களைச் சாதித்து வந்தவருக்கு இந்த அநாதைப் பெண்ணை நாகைப் பட்டினத்தில் கொண்டுபோய்ச் சேர்ப்பது முடியாத காரியமாகுமா?"

"தேவி! முடியாத காரியம் ஒன்றுமில்லை. ஆனால் நான் இச்சமயம் மேற்கொள்ள இயலாது. முதன் மந்திரியும் இளைய பிராட்டியும் என்னை அவசரமாகக் காஞ்சிக்குப் போகும்படி கட்டளையிட்டிருக்கிறார்கள். அவர்கள் கொடுத்த ஓலையுடன் போகிறேன். மிக முக்கியமான இராஜாங்கக் காரியமாகப் போகிறேன். ஆகையினால்தான் முடியாது என்று சொன்னேன். வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால்......"

"ஆம், ஆம்! விருப்பமில்லாவிட்டால் எத்தனையோ காரணங்கள் சொல்லலாம். அதனால் பாதகம் இல்லை. தனியாகப் பிரயாணம் செய்வது என்ற எண்ணத்துடனே தான் கிளம்பினேன். வழியில் சிற்சில இடங்களில் காளாமுகர்களின் கூட்டங்களைப் பார்த்ததும் கொஞ்சம் பயம் உண்டாயிற்று. சகல ஜீவர்களையும் காப்பாற்றக் கடமைப்பட்ட கடவுள் இருக்கிறார். அவரிடம் பாரத்தைப் போட்டுவிட்டுப் புறப்படுகிறேன். உலகத்தைத் துறந்து சந்நியாசினியாக முடிவு செய்த ஒரு பேதைப் பெண்ணை யார் என்ன செய்து விடுவார்கள்? போய் வருகிறேன், சோதிடரே!" என்று கூறிவிட்டு வானதி புறப்பட்

டான். அவனைப் பின்தொடர்ந்து போய்க் கொண்டே சோதிடர், "தேவி! தேவி! இருட்டும் சமயமாகி விட்டதே! அமாவாசைக் கங்குல். அதோடு வடகிழக்கில் மேகங்கள் குமுறுகின்றன. இரவு இந்த ஏழையின் குடிசையில் தங்கிவிட்டுக் காலையில் போகலாமே!" என்றார்.

"இல்லை, சோதிடரே! மன்னிக்க வேண்டும். இரவு திருவாரூர் போய்த் தங்குவதாக எண்ணம். இந்த மனிதர் தான் துணைக்கு வர மறுத்து விட்டார். திருவாரூரில் யாராவது கிடைக்காமலா போகிறார்கள்? அப்படி நான் என் உயிரைப் பற்றிக் கவலைப் படவும் இல்லை. இதனால் யாருக்கு என்ன உபயோகம்?......"

சோதிடர் காதிலும் வந்தியத்தேவன் காதிலும் கடைசியாகக் காதிலே விழுந்த வார்த்தைகள் இவைதான். வாசலில் காத்திருந்த பல்லக்கில் வானதி ஏறிக்கொண்டாள். பல்லக்கு மேலே சென்றது.

**ப**ல்லக்கு கண்ணுக்கு மறையும் வரையில் வந்தியத்தேவனும் சோதிடரும் அதைப் பார்த்தவண்ணம் நின்றார்கள்.

பிறகு வந்தியத் தேவன், "கொடும்பாளூர் இளவரசி சிலகாலத்துக்கு முன்பு வரையில் பெரும் பயங்கொள்ளியா யிருந்தாள். இளைய பிராட்டியின் மற்றத் தோழிகள் இவளை அதற்காகப் பரிகசித்துக் கொண்டிருந்தார்கள். பொம்மை முதலையை நதியில் மிதக்க விட்டு இவளைப் பயமுறுத்திப் பார்த்தார்கள்; நான் கூட அதில் ஏமாந்து போனேன். இப்போது திடீரென்று இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது? இவள் தனியே பிரயாணம் செய்யக் கிளம்பியது என்ன விந்தை? இளையபிராட்டி இதற்குச் சம்மதித்தது தான் எப்படி?" என்றான்.

"எனக்கும் அது ஆச்சரியத்தையே அளிக்கிறது. சென்ற முறை இப்பெண் இந்தக் குடிசைக்கு வந்திருந்தபோது, திடீரென்று மயக்கம் போட்டு விழுந்து விட்டாள்; தயங்கித் தயங்கி சன்னஸ்வரத்தில் பேசினாள். அந்தக் கொடும்பாளூர் இளவரசிதானா இவள் என்றே சந்தேகமா யிருக்கிறது. இன்று எவ்வளவு படபடப்பாகவும் துணிச்சலாகவும் பேசினாள்?"

"இப்படிப்பட்ட திடீர் மன மாறுதலுக்கு என்ன காரணமாயிருக்கும் என்று நினைக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"ஏதோ முக்கியமான செய்தி இவளுடைய மனதில் ஒரு பெரும் அதிர்ச்சியை உண்டுபண்ணி யிருக்கவேண்டும்."

"அப்படி என்ன முக்கியமான செய்தி இருக்க முடியும்?"

"ஏன்? பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டு விட்ட செய்தியே போதாதா? இந்தப் பெண்ணுக்கும் இளவரசருக்கும் திருமணம் நடக்கக் கூடும் என்று பேச்சா யிருந்ததே!"

இவ்விதம் சோதிடர் கூறியபோது, வந்தியத்தேவன், 'பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டுவிட்ட செய்தியா, அல்லது அவர் பிழைத்து நாகைப் பட்டினத்தில் இருக்கிறார் என்ற செய்தியா, அல்லது பூங்குழலியைப் பற்றி நான் கூறிய செய்தியா, எது இவளுக்கு இத்தகைய அதிர்ச்சியை அளித்திருக்கக் கூடும்?' என்று சிந்தனை செய்தான்.

"ஆம்; சோதிடரே! கொடும்பாளூர் வம்சத்தார் பரம்பரையான வீர சைவர்களாயிற்றே! இந்தப் பெண்ணுக்குத் திடீர் என்று புத்த மதத்தில் பற்று உண்டாவானேன்?" என்றான்.

"பூர்வஜன்ம வாசனையா யிருக்கலாம்" என்றார் சோதிடர்.

"நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் புறப்படுவானேன்?"

"அதுதான் எனக்கும் வியப்பை அளிக்கிறது!"

"உம்முடைய சோதிட சாஸ்திரத்தில் பார்த்துச் சொல்ல முடியாதா?"

"தம்பி! சோதிட சாஸ்திரத்தின் மூலம் இதை எப்படி அறியலாம்? இது ஒற்றாடல் சாஸ்திரத்தைச் சேர்ந்தது."

"ஒற்றாடல் என்று ஒரு சாஸ்திரமா?"

"ஏன் இல்லை? பொய்யா மொழிப் புலவரின் திருக்குறளைப் பற்றி நீ கேட்டதில்லையா?"

"அப்படி ஒரு நூல் உண்டு என்று கேட்ட ஞாபகமா யிருக்கிறது."

"அந்த நூலில் 'ஒற்றாடல்' என்று ஓர் அதிகாரம் இருக்கிறது. அதில் பத்துப் பாடல்கள் இருக்கின்றன."

"அப்படியா? அவற்றில் இரண்டொரு நல்ல பாடல்கள் சொல்லுங்கள்!"

"எல்லாம் நல்ல பாடல்கள்தான். இதைக் கேள் :—

'வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று.'

அரசன் தன் கீழ் ஊழியம் செய்வோரையும் தன்னுடைய சொந்த உறவினரையும் அவ்வாறே தன் பகைவர்களையும் ஒற்றர்கள் வைத்து ஆராய்ந்து கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர். இன்னும் கேள் :—

'துறந்தார் படிவத்தராகி இறந்தாராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று.'

துறவிகளைப் போல் வேடம் பூண்டும், செத்தவர்களைப் போலப் பாசாங்கு செய்தும், எதிரிகள் எவ்வளவு துன்புறுத்தினாலும் இரகசியத்தை வெளியிடாமலும் சோர்வில்லாமல் உழைப்பவன் ஒற்றன் என்று வள்ளுவர் கூறுகிறார். அரசர்கள் ஒரு ஒற்றனுடைய காரியத்தை இன்னொரு ஒற்றனைக் கொண்டு ஒற்றறிய வேண்டும் என்றும் அவர் சொல்லியிருக்கிறார்.

'ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.'

இந்தப் பாடல்களையெல்லாம் நீ கேட்டதில்லை யென்றா சொல்கிறாய்?"

வந்தியத் தேவனுக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. இனி அவகாசம் கிடைத்ததும் இருக்குறளைப் படித்துவிட்டுத்தான் வேறு காரியம் பார்ப்பது என்று தீர்மானித்துக் கொண்டான். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இப்படியெல்லாம் இராஜரீக முறைகளைப் பற்றி எழுதியவர் எத்தகைய அறிவாளியாயிருக்க வேண்டும்?

இன்னும் சற்றுப் பேசிக் கொண்டிருந்து விட்டு வந்தியத்தேவன் புறப்பட்டான். "இன்றிரவு இங்கே தாமதித்து விட்டுக் காலையில் போகலாமே?" என்று சோதிடர் கூறியதை அவன் கேட்கவில்லை.

"இன்னொரு சமயம் வருகிறேன்; அப்போது தங்கள் விருந்தாளியாயிருக்கிறேன்" என்றான்.

"இன்னொரு சமயம் நீ இங்கு வரும் போது என்னுடைய சோதிடங்கள் பலித்திருப்பதைக் காண்பாய்!" என்றார் சோதிடர்.

"ஐயா, சோதிடரே! நீர் சோதிடம் ஒன்றுமே சொல்லவில்லையே? சொல்லியிருந்தால் அல்லவா அவை பலிக்க முடியும்?" என்று கூறி நகைத்துக்கொண்டே வந்தியத்தேவன் குதிரைமீது ஏறிப் புறப்பட்டான்.

சோதிடர் வீட்டிலிருந்து சற்றுத் தூரம் வரையில் ஒரே பாதைதான் இருந்தது. பல்லக்குச் சென்ற பாதையிலேயே அவனும் போகவேண்டியிருந்தது. பின்னர், பாதைகள் இரண்டாகப் பிரிந்தன. ஒரு பாதை, வடக்கு நோக்கிக் கொள்ளிடக் கரைக்குச் சென்றது. இன்னொன்று, தென்கிழக்காகத் திருவாரூர் நோக்கிச் சென்றது. திருவாரூர்ச் சாலையில் வெகு தூரத்தில் பல்லக்குப் போய்க் கொண்டிருப்பதை வந்தியத்தேவன் பார்த்தான். ஒரு கணம் அவனுடைய உள்ளம் தத்தளித்தது. கொடும்பாளூர் இளவரசி கேட்ட உதவியை மறுக்க வேண்டி வந்து விட்டதே! உண்மையிலேயே அவளுக்கு உதவி தேவையாயிருக்குமானால்,...வழியில் அபாயம் ஏதேனும் ஏற்படுமானால்......பின்னால் அந்தச் செய்தி தெரியும்போது என்னை நானே மன்னித்துக் கொள்ள முடியுமா? வழித்துணை போக மறுத்தது பற்றி நெடுங்காலம் வருந்த வேண்டியிராதா? ஆயினும் என்ன செய்வது? முதன் மந்திரியும் இளைய பிராட்டியும் இட்ட கட்டளை மிகக் கண்டிப்பானது. வேறு காரியங்களில் நான் இப்போது தலையிட முடியாது. முன்னர் சில முறை அப்படிச் சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுத் தொல்லைப்பட்டதெல்லாம் போதும். ஆழ்வார்க்கடியான் வேறு எச்சரித்திருக்கிறான். அன்றியும், வானதி தேவியைத் தான் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்கு அழைத்துச் செல்வதென்பது கனவிலும் நினைக்க முடியாத காரியம்.......

இவ்வாறு முடிவு செய்து வந்தியத்தேவன் குதிரையைக் கொள்ளிடக் கரைப் பாதையில் திருப்பினான். அதே சமயத்தில் 'வீல்' என்ற ஒரு அபயக் குரல்,— மிக மிக இலேசான பெண் குரல்,— ஒலித்ததாகத் தோன்றியது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பல்லக்கைக் காணவில்லை. அங்கேயிருந்த சாலை முடுக்கில் திரும்பியிருக்கக் கூடும். ஆயினும் போய்ப் பார்த்து விட வேண்டும் என்ற முடிவுக்கு ஒரு கணத்தில் வந்து விட்டான் வந்தியத் தேவன். அதனால் அப்படியொன்றும் தாமதம் ஏற்பட்டு விடப் போவதில்லை. குதிரை பாய்ந்து சென்றது. வெகு சீக்கிரத்தில் சாலை முடுக்கின் அருகில் வந்து விட்டது. அங்கே அவன் கண்ட காட்சி வந்தியத் தேவனுடைய இதயமே நின்றுவிடும்படி செய்தது. பெண் ஒருத்தி சாலை ஓரத்து மரம் ஒன்றில் கட்டப்பட்டிருந்தாள். அவளுடைய வாயில் துணி அடைக்கப்

பட்டிருந்தது. இருட்டும் நேரமாதலால் யார் என்று முதலில் தெரியவில்லை. அருகில் சென்று பார்த்தான். வானதியின் பல்லக்குடன் நடந்து சென்ற சேடிப் பெண் என்று தெரிந்தது. அவன் முனகிக்கொண்டே தன் கட்டுக்களை அவிழ்த்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தான். வந்தியத்தேவன் குதிரையிலிருந்து பாய்ந்து இறங்கி, முதலில் வாயில் அடைத்திருந்த துணியை எடுத்துவிட்டு, கட்டுக்களையும் அவிழ்த்து விட்டான். அவ்வளவு பலமாகக் கட்டப்படவில்லை என்பது அவன் உள் மனதில் பதிந்தது.

"பெண்ணே! என்ன நடந்தது? சீக்கிரம் சொல்! பல்லக்கு எங்கே? உன் எஜமானி எங்கே?" என்று பதறிக் கொண்டே கேட்டான்.

சேடிப் பெண் உளறிக் குளறி மறுமொழி கூறினாள். அந்தச் சாலை முடுக்கில் பல்லக்குத் திரும்பியபோது திடீரென்று ஏழெட்டு மனிதர்கள் பக்கத்து மரங்களின் மறைவிலிருந்து பாய்ந்து வந்தார்கள். அவர்கள் சிலருடைய கைகளில் மண்டை ஓடுகளும் சூலாயுதங்களும் காணப்பட்டன. அவர்களில் இரண்டு பேர் சேடிப் பெண்ணை மண்டையில் அடித்துக் கீழே தள்ளினார்கள். வாயில் துணியை அடைத்தார்கள். பிறகு இழுத்துக் கொண்டு போய் மரத்தில் கட்டினார்கள். இதற்குள் மற்றவர்கள் பல்லக்குச் சுமந்தவர்களிடம் ஏதோ பயங்கரமான குரலில் சொல்லவே, அவர்கள் பாதையை விட்டு விலகிக் குறுக்கு வழியில் பல்லக்குடன் ஓடினார்கள். மற்றவர்களும் தொடர்ந்து போனார்கள். 'வீல்' என்று சத்தம் போட்டது சேடிப் பெண் தான். வானதி தேவியின் குரலே கேட்கவில்லை.—இவ்விதம் கூறி விட்டு, பல்லக்குச் சென்ற குறுக்குப் பாதையையும் அச் சேடிப் பெண் காட்டினாள்.

"பெண்ணே! நீ அந்தக் குடந்தை சோதிடர் வீட்டிற்குப் போயிரு! நான் உன் எஜமானியைக் கண்டு பிடிக்கப் பார்க்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் குதிரைமீது பாய்ந்து ஏறினான். குதிரை இராஜ பாட்டையிலிருந்து திரும்பிக் குறுக்கு வழியில் சென்றது. மேடு, பள்ளம், காடு, செடி என்று பாராமல் அதி வேகமாய்ச் சென்றது. (தொடரும்)

* * * * * * * * * * * * * * * * * * * * *



மாயூரம் ஸ்ரீ ஆர். கே. சுப்பிரமணியப் பிள்ளை அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி சுசீலாவுக்கும் உடையூர் ஸ்ரீ சம்பந்தம் பிள்ளை அவர்களின் புதல்வன் சிரஞ்சீவி கணேசனுக்கும் சென்ற 3உ சிதம்பரத்தில் வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தது. அதையொட்டி 5உ மாயூரம் மணமகள் இல்லத்தில் கிரகப்பிரவேச வைபவமும் சிறப்பாக நடந்தது.

சிதம்பரத்தில் மணமகன் இல்லத்தில் நடந்த திருமணத்தின் போதும் மாயூரத்தில் நிகழ்ந்த கிரகப்பிரவேசத்தின் போதும் அன்று மாலை நடந்த ஸ்ரீமதி கோமதியின் இன்னிசைக் கச்சேரியின் போதும் உள்ளூரிலிருந்தும், வெளியூரிலிருந்தும், நண்பர்களும், பிரமுகர்களும், உறவினர்களும் திரளாக விஜயம் செய்து சிறப்பித்து மணமக்களை ஆசீர்வதித்தனர். தம்பதிகளுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும் அன்பளிப்புகளும் வந்து குவிந்தன. வாழ்க சுசீலா - கணேசன்!

* * * * * * * * * * * * * * * * * * * * *



குளிர்ந்த பானங்கள்
வீட்டிலேயே
சுலபமாகவும்
சிக்கனமாகவும்
செய்துகொள்ளுங்கள்
ROSE
டி.எஸ்.ஆர்
அதிநேர்த்தியான
சர்பத்துகள்
• நன்னாரி
• ரோஸ், ஆரஞ்சு
மற்றும் பலவித சர்பத்துகள்
இந்த கோடைக்கு ஏற்ற பானங்கள்
விருந்தினரை உபசரிக்க மிகமேலானவை
டி.எஸ்.ஆர். & கோ.,
.... கும்பகோணம் .....
FAS-770-TAM






சிக்கனம்
திறமை
நீடித்த உழைப்பு
நல்ல அமைப்பு
இவையனைத்தும்
பொருந்தியவை
"போனிக்ஸ்"
விசிறிகளே!
வெயிலைப்பற்றி
எனக்கு பயமில்லை
வீட்டிலே
போனிக்ஸ்
விசிறி இருக்கிறது
EWL
போனிக்ஸ்
(A.C. & D.C.) விசிறிகள்
ஸோல் ஏஜண்டுகள்
R.M.S. & CO. LTD.

# கிரக லக்ஷ்மி

ராமப்ரியா

"லக்ஷ்மி, லக்ஷ்மி! ஒரு முக்கிய சமாசாரம்" என்று அவளைக் கூப்பிட்டுக் கொண்டே வந்தான் தியாகு. அப்பொழுதுதான் அவன் ஆபீஸிலிருந்து வீட்டிற்கு வந்திருந்தான்.

அடுக்களையில் ஏதோ வேலையாயிருந்த லக்ஷ்மி தியாகுவின் குரலைக் கேட்டதும் காப்பி டம்ளருடன், "இதோ வந்து விட்டேன், என்ன முக்கியமான செய்தி!" என்று கேட்டுக் கொண்டே வந்து டம்ளரை அவன் கையில் கொடுத்தாள்.

"பட்டணத்தில் காலேஜில் படிக்கும் என் மாமாவின் பெண் கமலாவைப் பற்றி உன்னிடம் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேனல்லவா! அவளுக்குப் பரீக்ஷை முடிந்து லீவு விட்டாகி விட்டதாம். அவள் மதுரையில் பெற்றோர்களிடம் போவதற்கு முன் இங்கு வந்து பத்து நாள் தங்கி விட்டுப் போவதாக எழுதியிருக்கிறாள். இதுதான் அவள் எனக்கு எழுதிய முதல் கடிதம்; உன்னைப் பார்க்க அவளுக்கு மிகவும் ஆவலாக இருக்கிறதாம். நமக்குக் கலியாணம் ஆகி இந்த மூன்று வருஷத்தில் நீ அவளைப் பார்த்ததில்லையல்லவா!" என்று கேட்டான் தியாகு.

"இல்லை, நான் அவளைப் பார்த்ததில்லை. அவள் வருவதில் ரொம்ப சந்தோஷம். கமலா என்றைக்கு வருகிறாள்!" என்று கேட்டாள் லக்ஷ்மி.

"நாளைக்கு வருவதாக எழுதியிருக்கிறாள். ஒரு காலத்தில் கமலா என்னை... உனக்குத் தெரியுமல்லவா!" என்று இழுத்தாற் போலக் கூறித் தியாகு அவளையே கூர்ந்து நோக்கினான். கலகலவென்று சிரித்தவாறு லக்ஷ்மி, "இதற்கு இப்படியென்று விழுங்குவானேன்! ஆமாம், ஒரு காலத்தில் கமலா என்னுடைய ஸ்தானத்திற்குப் போட்டியிட்டவளென்றும் நீங்கள் அவளை வேண்டாமென்று மறுத்து விட்டதால் கமலாவுக்குக் கோபம் என்றும் அம்மா சொல்லியிருக்கிறாள். அந்தக் கோபம் காரணமாக வந்த வரன்களையெல்லாம் தள்ளி விட்டுக் கமலா மதராஸில் காலேஜில் படிக்கிறாளாமே! நான் உங்களை அடையக் கொடுத்து வைத்திருக்கும் பொழுது வேறு எப்படி நடக்கும்! கமலாவைப் பார்க்க நானும் ஆவலாகத் தானிருக்கிறேன். பட்டணத்தில் காலேஜில் படித்த அவளுக்குக் கர்நாடகமான என்னுடைய செய்கைகள் பிடிக்க வேண்டுமே என்றுதான் கவலையாக இருக்கிறது" என்றாள்.

"அவளுக்கு உன்னைப் பிடித்து இப்பொழுது என்ன ஆக வேண்டும்! கமலா நல்ல அழகிதான். ஆனால் அவளுடைய குணமோ! அப்பப்பா! சொல்லி முடியாது! வெடுக்கென்று பேசும் சுபாவம், தானென்ற அகம்பாவம், பொறாமை முதலிய பல துர்க்குணங்களுக்கு இருப்பிடமாயிருந்ததினாலேதான் அவளை வேண்டவே வேண்டாமென்று கண்டிப்பாகச் சொல்லி விட்டேன். அதில் அவளுக்கு என்னிடம் ரொம்பக் கோபம். 'அத்தானுக்கு என்னைவிட உசத்தியாக யார் வரப் போகிறாள்' என்று சவால் விட்டதாக நான் கேள்விப் பட்டேன். அவள் இப்பொழுது எதற்காக வருகிறாள் தெரியுமா? நீ எப்படியிருக்கிறாய்! உனக்கும் எனக்கும் சரியாக மன ஒற்றுமையிருக்கிறதா என்றெல்லாம் துப்பறியவே வருகிறாள். அவள் வருவது கொஞ்சம் கூட எனக்குப் பிடிக்கவில்லை. நம் அமைதியான வாழ்க்கையைக் குலைப்பதற்கு வருகிறாளோ என்றுகூட எனக்குக் கவலையாக இருக்கிறது!" என்றான் தியாகு.

"ரொம்ப நன்றாக இருக்கிறதே உங்கள் பேச்சு! நம்மைச் சேர்ந்தவர்கள் வந்து போய்க் கொண்டிருந்தால்தான் நன்றாயிருக்கும். அதனால் நம் அமைதி ஏன் கெடப் போகிறது! இந்தமாதிரி மனிதர்களைத் திருப்தி செய்வதில்தான் நம் சாமர்த்தியம் இருக்கிறது. பேசிக் கொண்டே இருக்கிறேனே! ராத்திரி சமையலைக் கவனிக்க வேண்டுமே!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனாள் லக்ஷ்மி. சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடியே தியாகு பழைய சம்பவங்களைத் தன் மனத்தில் நினைவுறுத்திக் கொண்டான்.

கலாசாலைப் படிப்பை முடித்துக் கொண்டு தன்னுடைய சொந்த ஊராகிய மாயவரத்துக்குப் பெற்றோர்களிடம் வந்தான் தியாகு. வண்டியை விட்டு இறங்கியதுமே வாசலில் தங்கப் பதுமை போலப் பதினைந்து வயதுப் பெண் நிற்பதைப் பார்த்து விட்டு இது யார் என்று கேட்பதைப் போல அம்மாவைப் பார்த்தான். அதைப் புரிந்து கொண்ட அவன் தாயார், "என்னடா முழிக்கிறே! உன் மாமா பெண் கமலா! மூன்று வருஷமாக நீ பார்க்கவில்லை. விடுவிடென்று வளர்ந்து விட்டாள். கமலாவுக்கு இந்த வருஷம் எப்படியாவது கல்யாணம் செய்து விட வேண்டுமென்று உன் மாமா துடிக்கிறார். சரி! நீ பல் தேய்த்து விட்டு வா!" என்றாள்.

கமலா சதா அத்தான், அத்தானென்று தியாகுவையே சுற்றிக் கொண்டிருந்தாள். வீட்டிலிருக்கிறவர்கள் வேறு அவர்களைக் கூடிய சீக்கிரம் தம்பதியாகப் போகிறவர்கள் என்று கேலி செய்தார்கள். ராஜா மாதிரி கண்ணுக்கு அழகனாகவும் கெட்டிக்காரனாகவும் இருந்த தியாகுவை மணந்துகொள்ளக் கமலாவுக்கு என்ன கசக்குமா! தானும் ரதி மாதிரி இருப்பதினால் தியாகுவும் தன்னைக் கலியாணம் செய்து கொள்ளுவதில் ஆட்சேபணை ஒன்றும் சொல்லமாட்டானென்று அவள் திடமாக நம்பியிருந்தாள். கணவனென்ற உரிமையுடனேயே அவனிடம் பழகினாள். எதற்கெடுத்தாலும் கமலாவுக்கு மூக்குக்கு மேலே கோபம் வந்து விடும். அவள் மனத்தில் நினைத்ததைச் சாதித்தே ஆக வேண்டும் என்று நினைப்பாள். ஒருவரையும் லட்சியம் பண்ண மாட்டாள். பணக்காரப் பெற்றோர்களின் ஒரே பெண். அழகுப் பதுமை. ஆகவே தனக்கு இணை ஒருவருமில்லை என்று ஒரே அகம்பாவமாயிருந்தாள்.

தியாகுவுக்கு அவளுடைய குணங்கள் ஒன்றும் பிடிக்கவில்லை. கமலாவின் கல்யாணத்தைச் சீக்கிரம் முடிக்க விரும்பிய அவள் தந்தை முதலில் தியாகுவின் சம்மதத்தை அறிய விரும்பினார். தியாகுவைத் தனியாக அழைத்துக் கேட்டாள், அவன் தாயார்.

"அம்மா! என்னைக் கோபிக்காதே! எனக்குக் கமலாவைப் போல அழகும் படிப்பும் மட்டும் நிறைந்து, சகல துர்க்குணங்களுமுடைய, பீங்கான் பொம்மை போல இருக்கும் பெண் வேண்டவே வேண்டாம். குடும்பத்தை அமைதியாக நடத்தத் தெரிந்த சாதுவான பெண் யாராயிருந்தாலும் அவளை நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளத் தயார். ஆனால் இந்த அகங்காரம் பிடித்த

கமலாவை மட்டும் என் கழுத்தில் கட்டி விடாதே அம்மா!" என்றான் தியாகு.

தியாகுவின் தாயார் இந்த விஷயத்தைக் கமலாவின் பெற்றோர்களுக்குத் தெரிவித்தாள். கமலாவின் மனோரதம் தகர்த்து எறியப்படவே அவளுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "நான் கலியாணம் செய்து கொண்டு அடிமையாக இருக்கப் போவதில்லை. நான் மதராஸுக்குப் போய் மேலே படித்து முன்னுக்கு வரப் போகிறேன். ஆனால் ஒன்று. அத்தானுக்கு என்னைவிட உயர்வாக எவள் வருகிறாளென்பதைப் பார்த்து விடுகிறேன்" என்று கத்திக் காளி அவதாரம் எடுத்தாற்போல அட்டகாசம் செய்து, அன்றே தன் தாய் தந்தையரையும் அங்கிருந்து புறப்படச் செய்து விட்டாள்.

பிறகு லக்ஷ்மிக்கும் தியாகுவுக்கும் விமரிசையாக விவாகம் நடந்தேறியது. லக்ஷ்மி பார்ப்பதற்குச் சுமாராக இருந்தபோதிலும் தியாகு விரும்பிய சகல நற்குணங்களும் உடையவளாக, கள்ளங்கபடில்லாத சாதுவாய் இருந்தாள்; மாமியார், மாமனார், கணவன் எல்லோருக்கும் திருப்தி யளிக்கும் விதத்தில் நடந்து வந்தாள். தியாகுவுக்குத் திருச்சியில் வேலையாகி விடவே அங்கு தியாகுவும் லக்ஷ்மியும் தனிக் குடித்தனம் நடத்திக் கொண்டிருந்தார்கள். கோபத்தினால் தியாகுவின் கல்யாணத்திற்குக் கமலாவும் அவள் பெற்றோரும் வரவில்லை. கமலா கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லையென்று தீர்மானித்துப் பட்டணத்தில் படித்துக் கொண்டிருந்தாள். தியாகுவின் மனைவியைப் பார்க்கவேண்டுமென்று ரொம்ப ஆசைப்பட்டாள். தன்னைவிட எந்தவிதத்தில் அவள் உயர்ந்தவள் என்று பார்க்க வேண்டுமென்று அவளுக்கு ஆசை. இரண்டு வருஷம் கழித்து விடுமுறைக்காக ஊருக்குப் போகும் பொழுது பார்த்து விட்டுத்தான் போகவேண்டுமென்று நினைத்துத் தியாகுவுக்குத் தான் லீவுக்கு அங்கு புறப்பட்டு வருவதாகக் கடிதம் எழுதினாள்.



குறித்த நாளில் கமலாவை ரயிலடிக்குச் சென்று அழைத்து வந்தான் தியாகு. வண்டியை விட்டு இறங்கியதுமே ஆவலோடு விருவிரென்று உள்ளே வந்தாள் கமலா. "வாருங்கள்!" என்று சிரித்த முகத்துடன் வரவேற்றாள் லக்ஷ்மி. "இவள்தானே என் அத்தான் மன்னி!" என்று தியாகுவைக் கேட்டாள் கமலா. 'ஆமாம்' என்று தலையசைத்தான் தியாகு.

கமலா வந்து நான்கு நாட்களாயின. லக்ஷ்மி ஓடோடியும் அவளுக்குச் சிசுருஷை செய்து அவளுடைய நன்மதிப்பைப் பெற முயற்சி செய்தாள். கமலாவோ லக்ஷ்மியைச் சிறிதும் லட்சியம் செய்து பேசவில்லை. சதா முன் ஹாலில் தியாகுவோடு ஆங்கிலத்திலேயே பேசிக்கொண்டிருப்பாள். தனக்கு லக்ஷ்மி சிறிதும் சமமானவளல்ல என்ற அலக்ஷ்ய பாவத்துடனேயே அவள் நடந்து கொண்டிருந்தாள். இது தியாகுவுக்கு மிக வருத்தத்தை அளித்ததே யானாலும் வெளியேயும் காண்பித்துக் கொள்ள முடியாமல் திண்டாடினான். சாப்பிடும் சமயத்தில் லக்ஷ்மி கூப்பிட்டவுடன் தியாகுவுடன் சாப்பிடப் போவாள். சாப்பாடானதும் கை அலம்பிவிட்டு ரேடியோ கேட்க முன் ஹாலுக்கு வந்து விடுவாள்.

அன்று சாயங்காலம் ஐந்துமணி சுமாருக்கு நன்றாக டிரஸ் செய்துகொண்டு உட்கார்ந்திருந்தாள் கமலா. தியாகு ஆபீஸிலிருந்து வந்தவுடனே "அத்தான்! இன்றைக்குப் பொழுதே போகவில்லை. சினிமாவுக்குப் போவோமா!" என்று கொஞ்சலாகக் கேட்டாள்.

"உம், போய் வருவோம்!" என்று சொல்லிவிட்டு "லக்ஷ்மி, லக்ஷ்மி" என்று கூப்பிட்டுக்கொண்டே வந்தான் தியாகு. உள்ளே வேலையாயிருந்த லக்ஷ்மி, "என்ன! என்னைக் கூப்பிட்டீர்களா!" என்று கேட்டுக் கொண்டு வந்தாள்.

"கமலா சினிமாவுக்குப் போகவேண்டுமென்கிறாள். உனக்கு வேலையெல்லாம் ஆயிற்றல்லவா!" என்றான். "அப்போதே சொல்லியிருந்தால் வேலையெல்லாம் சீக்கிரம் முடித்திருப்பேன். இதோ அரை மணி நேரத்தில் எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள் லக்ஷ்மி. கமலாவோ நாழியாகி விட்டதென்று பறந்தாள். "அத்தான்! நாழியாகி விட்டதே! லக்ஷ்மி சதா வேலை வேலையென்று அடுக்களையிலேயே இருக்கிறாளே தவிர 'மோஸ்தராக ட்ரஸ்' பண்ணவே மாட்டேனென்கிறாள். அவளால் நாழியாகி விடும் போல் இருக்கிறதே! அவளுக்கு வேலையிருந்தால்,

அதை அவள் கவனிக்கட்டும். நாம் இருவரும் மட்டும் போய் வருவோமே!" என்றான்.

அதைக் கேட்டுக் கொண்டே வந்த லக்ஷ்மி, "கமலா சொல்வது போல என்னால் தாமதமாகி விடும்போல் இருக்கிறது. நீங்கள் இருவரும்தான் போய் வாருங்களேன். கமலா ஊருக்குப் போகிறவர். நான் இங்கு இருக்கிறவள்தானே! இன்னொரு நாள் பார்த்துக் கொண்டால் போகிறது!" என்று தியாகுவிடம் சொன்னாள். இதைக் கேட்ட கமலா ரௌத்ராகாரமானாள். "நான் மதராஸில் பார்க்காத சினிமா கிடையாது. இனி மதுரையிலும் எவ்வளவோ பார்க்கப் போகிறேன். எல்லோரும் குஷியாகச் சேர்ந்து போகலாமென்று ஆசைப்பட்டுத்தான் சொன்னேன்!" என்று படபடவென்று பொரிந்து தள்ளினாள். தியாகுவுக்குக் கமலாவின் பேச்சு மட்டற்ற வெறுப்பை அளித்ததேயாயினும் வெளியில் காட்டிக் கொள்ளாமல், "லக்ஷ்மி! நீயும் சீக்கிரம் புறப்படு!" என்றான். "இதோ! அரை நொடியில் வந்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டு அவள் உள்ளே போய் டிரஸ் செய்துகொண்டு தயாரானதும் மூவருமாகப் புறப்பட்டு, சினிமாவுக்குப் போயினர்.

"சினிமா ஆரம்பித்து அதிக நாழிகையாகவில்லை. டிக்கட் வாங்கி வரட்டுமா!" என்று தியாகு கமலாவைப் பார்த்துக் கேட்டான்.

"வேண்டாம், வேண்டாம். ஆரம்பித்த பிறகு பார்த்தால் சுவாரஸ்யமாகவே இருக்காது. இன்று லக்ஷ்மியினால் தான் தாமதமாகி விட்டது. நாம் மட்டும் வந்திருந்தாலும் ஜாலியாகப் பார்த்திருக்கலாம்!" என்று நிஷ்டூரமாகச் சொன்னாள்.

தியாகுவுக்கு அவளுடைய பேச்சு காரசாரமாக இருந்தது. மூவரும் ஒருவரோடொருவர் பேசாமல் மௌனமாக வீடு திரும்பினார்கள். லக்ஷ்மி அன்றிரவு கமலாவுக்கு நேர்த்தியான விருந்து தயாரித்திருந்தாள். கமலாவுக்கும் தியாகுவுக்கும் இரண்டு இலைகள் போட்டுப் பரிமாறி விட்டு அவர்களைச் சாப்பிட அழைத்தாள். "லக்ஷ்மி! தினசரி நீ மட்டும் தனியாகச் சாப்பிடுகிறாயே! நீயும் எங்களுடன் உட்கார்ந்து விடேன்!" என்று பரிவுடன் சொன்னான் தியாகு.

இதே வார்த்தையைக் கமலா சொல்லியிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கு மென்று மனசில் நினைத்துக் கொண்டு லக்ஷ்மி, "பரவாயில்லை, கமலா நம் வீட்டுக்கு வந்த விருந்தாளியல்லவா! அவளுக்குப் பார்த்துப் போட்டுவிட்டு நான் பிறகு சாப்பிடுகிறேன்" என்று சிரித்துக் கொண்டே சொன்னாள். "நான் ஒன்றும் இந்த வீட்டிற்குப் புதிதாக வந்துவிட்ட விருந்தாளியல்ல. நான் குழந்தையிலிருந்தே இங்கேயே வளர்ந்து நானும் அத்தானும் இணை பிரியாது விளையாடினவர்கள் தான். நீதான் நேற்று வந்தவளே தவிர நான் பிறந்து வளர்ந்ததே இந்த வீட்டில் தான்!" என்று வெடுக்கென்று சொன்னாள் கமலா. பொறுமையே அவதாரமாகக் கொண்ட லக்ஷ்மிக்குக்கூடக் கமலாவின் வார்த்தைகள் சுருக்கென்று தைத்தன. தியாகு வந்த கோபத்தைச் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டான். இருவரும் மௌனமாகச் சாப்பிட்டார்கள்.

லக்ஷ்மி தானும் சாப்பிட்டு விட்டு, அடுக்களைக் காரியங்களையெல்லாம் முடித்துக் கொண்டு, ஒரு டம்ளர் பாலை எடுத்துக் கொண்டு வந்து கமலாவிடம் கொடுத்தாள். "எனக்கு வயிறே சரியாக இல்லை. எனக்குப் பால் வேண்டாம்" என்று மறுத்துவிட்டு, "அத்தான்! எனக்குத் தூக்கம் கண்ணைச் சுற்றுகிறது! நான் படுத்துக் கொள்ளப் போகிறேன்" என்று கூறி மறுமொழிக்குக் காத்திராமல் விர்ரென்று மாடியிலிருந்த தன்னறைக்குச் சென்று விட்டாள்.

தியாகு லக்ஷ்மியையே பார்த்துக் கொண்டிருந்தான். லக்ஷ்மி ஒன்றும் பேசாமல் பெருமூச்செறிந்தாள். "லக்ஷ்மி, நல்ல நிலாவாக இருக்கிறது. மொட்டை மாடியில் சற்று நேரம் உட்காரலாம். வருகிறாயா!" என்றான் தியாகு.

"இதோ, வெற்றிலைத் தட்டை எடுத்துக் கொண்டு வருகிறேன். நீங்கள் முதலில் போங்கள்" என்றாள் லக்ஷ்மி. இதைக் கேட்ட கமலா, அவர்கள் என்ன பேசுகிறார்களென்று அறிய எண்ணிப் பூனை போல அவர்களுக்குத் தெரியாத இடத்தில் நின்று ஒட்டுக் கேட்கலானாள்.

"லக்ஷ்மி, அம்மங்காளைப் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டாயே! அவளையும் அவளுடைய கல்யாண குணங்களையும் பார்த்தாயல்லவா! உன் ஆசை தீர்ந்ததா!" என்றான். மேலும் தொடர்ந்து, அவன் "அவளுக்கு எதற்காக உன் உயிரை விட்டுக்கொண்டு சிசுருஷை செய்கிறாய்! ஒரு வார்த்தையாவது திருப்தியாகச் சொல்லுகிறாளா! உன்னை அவள் வெடுக்கென்று சொல்லும் போது என் உள்ளம் எப்படிக் கொதிக்கிறது தெரியுமா! நீ எல்லாவற்றிற்கும் ஒரு புன்சிரிப்போடு தாழ்ந்து போவதால் அவள் இன்னும் மிஞ்சுகிறாள். அம்மாவுக்கு நான் எல்லாவற்றையும் விவரமாக எழுதி உடனே புறப்பட்டு வரச் சொல்லியிருக்கிறேன்" என்று சொன்னான்.

"அம்மாவுக்கு எழுதி விட்டீர்களா! அப்படியானால் சீக்கிரம் வந்து விடுவார். எனக்கு இப்போது என்ன கஷ்டம்! உங்களுடைய அன்பு இருக்கும் வரை நான் வேறு எந்தக் கஷ்டத்தையும் பொறுத்துக் கொள்வேன். நான் எவ்வளவு தான் சகோதரி போல் நினைத்துக் கொண்டு அவளோடு பழகினாலும் அவள் என்னவோ என்னை விரோதி போல் பாவிப்பது தான் எனக்கு வருத்தமாயிருக்கிறது. வாய் நன்மையிருந்தால், அருமை அத்தானைக் கல்யாணம் செய்து கொண்டு என்னுடைய ஸ்தானத்தில் ராணி மாதிரி அல்லவா இருப்பாள்! அவளை நினைக்கும்போது உலகத்தில் தன்னுடைய வாழ்க்கையை வகுத்துக் கொள்ளத் தெரியாத பேதை என்றுதான் பரிதாபப் படத் தோன்றுகிறது" என்றாள்.

"போதும்! நீ அவளைப் பற்றிப் பரிதாபப் பட்டது. சரி, நேரமாயிற்று. இந்த உடம்பில் நீ ரொம்ப நேரம் கண் விழித்திருக்கலாகாது. படுத்துக் கொள்ளப் போவோம்!" என்று சொல்லி விட்டு எழுந்தான் தியாகு. அத்தனை நாழிகையும் இவர்கள் பேசுவதை ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த கமலா இவர்கள் வருவதைப் பார்த்ததும் சரேலென்று தன் அறைக்குச் சென்று தூங்குவது போல் படுத்துக் கொண்டு விட்டாள்.

* * *

மறுநாள் ஒரே பிடிவாதமாகக் கமலா ஊருக்குப்போக வேண்டுமென்று புறப்பட்டு விட்டாள்.



உபாத்தியாயர்:—ஒரு வீசை படிக்கல் எவ்வளவு கனம் இருக்கும்?

மாணவன்:—தெரியவில்லை, ஸார்!

உபாத்தியாயர்:—அது போனால் போகிறது. நாலரை மணி ரயில் எத்தனை மணிக்குப் புறப்படுகிறது?

மாணவன்:—நாலரை மணிக்கு!

உபாத்தியாயர்:—அதே மாதிரி ஒரு வீசைக் கல் எவ்வளவு கனம்?

மாணவன்:—நாலரை வீசை!

லக்ஷ்மி கூட இன்னும் நாலு நாள் இருந்துவிட்டுப் போகலாமென்று வற்புறுத்திச் சொல்லியும் கேட்கவில்லை. தியாகுவும் ரொம்ப நல்லதாயிற்றென்று அவளை ரயிலேற்றிவிட்டுத் திரும்பினான்.

இரண்டு நாட்களுக்கெல்லாம் லக்ஷ்மியின் பெயருக்குக் கமலாவிடம் இருந்து ஒரு நீண்ட கடிதம் வந்தது.

என் அன்புள்ள லக்ஷ்மி,

நான் என் பெற்றோர்களுக்கு ஒரே செல்லப் பெண்ணாகையால் என்னை அருமையாக வளர்த்து ஒன்றும் தெரியாதவளாகச் செய்துவிட்டார்கள். அத்தான் என்னை நிராகரித்தபோது எனக்கிருந்த வருத்தம் சொல்லி முடியாது. ஆனால் உள் மனசில் அத்தானின் மனைவி எப்படித்தான் இருக்கிறாள் என்று பார்க்க வேண்டும் போல் தோன்றும். என்னை அவ்வளவு நிர்த்தாட்சண்யமாக நிராகரித்தவரின் மனைவியைப் போய் என்ன பார்வை என்ற எண்ணமும் கூடவே தோன்றும். உடனே பிரயாணத்தை நிறுத்தி விடுவேன். இந்தத் தடவை எப்படியாவது உன்னைப் பார்த்து விடுவது என்று நிச்சயித்து வந்தேன். உன்மேல் அத்தான் அன்பைச் சொரிவதும் நீயும் அவரும் லட்சிய வாழ்க்கையை நடத்துவதும் என் அசூயையை அதிகமாக்கின. நானிருக்க வேண்டிய ஸ்தானத்தை நீ அபகரித்து, நான் அடைய வேண்டிய சந்தோஷத்தை யெல்லாம் நீ அநுபவிக்கிறாய் என்று பிரமை தட்டியது. அதனால் உன்னைப் பார்க்கும்போதே எனக்கு வேம்பாகக் கசந்தது. நீ எது செய்தாலும் ஏதாவது நிஷ்டூரமாகச் சொல்லிக்கொண்டு வந்தேன். நீயும் என்னோடு எதிர்த்துப் பேசுவாய், அல்லது பெண்களுக்கு உண்டான சுபாவப்படி கணவரிடமாவது சொல்லிக் குறைபட்டுக் கொள்வாய் என்று எதிர்பார்த்தேன். ஆனால் நீயோ பெருந்தன்மையான புன்சிரிப்புடன் எதிரியை உன்னுடைய அடிமையாக்கிக் கொள்கிறாய்.

நான் ஊருக்குக் கிளம்பும் தினத்திற்கு முதல் தினம் நீயும் அத்தானும் மொட்டை மாடியில் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டேன். அதிலிருந்து என் மனம் மாறிவிட்டது. நான் செய்த தவறை யெல்லாம் உணரலானேன். நான்தான் அத்தானை நேசித்தேனே ஒழிய அவர் என்னை விரும்பவே இல்லை. நாங்கள் கலியாணம் செய்து கொண்டிருந்தாலும் எங்களுடைய வேறுபட்ட குணங்களுக்கு ஒத்து இருக்காது. நீயே அத்தானுக்கு ஏற்ற கிருகலக்ஷ்மி. நீங்கள் இருவரும் சகல சௌபாக்கியங்களுடன் நன்றாக இருக்க வேண்டுமென்று பகவானைப் பிரார்த்திக்கிறேன். நான் மேலே டாக்டர் பரீட்சைக்குப் படிக்கப் போகிறேன். இன்னும் இரண்டு மாதத்தில் சென்னைக்குப் போய் காலேஜில் சேர்ந்து விடுவேன். டாக்டர் பரீட்சையில் தேறியவுடன் தேச சேவையின் பொருட்டு என் வாழ்க்கையை அர்ப்பணிக்க விரும்புகிறேன். அதுதான் எனக்கேற்ற பணியாகக் கருதுகிறேன். இத்தனை நாள் நான் நடந்து கொண்டவிதத்திற்கு ஏற்ற பிராயச்சித்தமாக இருக்கும். நான் பழைய கமலாவே இல்லை. என் குணங்களை மாற்றின நீயே என் குரு. உங்களிருவருக்கும் எனது நமஸ்காரம்.

கமலா.

படித்து முடித்தவுடன் தியாகு லக்ஷ்மியை நோக்கி, "கமலாவே என் லக்ஷ்மியினால் மனம் திருந்தி 'நீதான் உண்மையான கிருகலக்ஷ்மி' என்று புகழ்ந்திருக்கிறாளே! ஆனால் நீ என்னுடைய 'இருதய லக்ஷ்மி' இல்லையா!" என்று சொல்லி ஆசையோடு அவளைப் பார்த்தான்.

"போதும், நீங்கள் புகழ்ந்தது!" என்று அன்புடன் கணவனைக் கடிந்து கொண்டாள் லக்ஷ்மி. அவள் உள்ளம் சந்தோஷத்தால் பூரித்தது

# நீங்கள் ஒரு கொசுவை

## பெரிய துப்பாக்கியால் சுட்டு வீழ்த்துவீர்களா?



சுத்த மடத்தனம் அல்லவா? ஆயினும் பாட்டரி ரேடியோ உபயோகிக்கும் அநேகர் குறைந்த சக்தி செலவில் திருப்திகரமாக ரேடியோ கேட்க முடிந்தாலும்கூட, மிகவும் சக்தி வாய்ந்ததும் அதிக செலவு அளிக்கக் கூடியதுமான, ஸெட்டுகளை உபயோகிக்கிறார்கள்.

அதிகப்படியான வால்யூம் அளிக்கக்கூடிய ஓர் ரேடியோ ஸெட் பாட்டரியின் சக்தியை வெகு சீக்கிரத்திலேயே வீணாக வற்றச் செய்கிறது.

குறைந்த சக்தியால் வேலை செய்யும் ஓர் ரேடியோ பாட்டரி சக்தியை சிக்கனமாக செலவிட்டு உங்களுடைய பணத்தையும் எப்பொழுதும் மிச்சப்படுத்துகிறது. ஆகையால் நீங்கள் ஒரு பாட்டரி ரேடியோ வாங்கும்பொழுது குறைந்த சக்தியை உபயோகிக்கும் ஸெட்டையே பார்த்து வாங்குங்கள். அதுவே உங்களுக்குப் போதிய, தெளிவான வால்யூமை அளித்து, பெருங்கூச்சலை தவிர்க்கிறது.

நீங்கள் எப்பொழுதும்

**EVEREADY**

TRADE-MARK

**ரேடியோ பாட்டரிகளையே உபயோகியுங்கள்**

அவைகளே உலகத்தில் மிகச்சிறந்த ரேடியோ பாட்டரிகள்

ஒரு நாஷனல் கார்பன் தயாரிப்பு

# தமிழ்க் களஞ்சியம்



## 1. நாட்டில் சங்கீத மயம்!

பூமிக்குள் ஆங்காங்கு பல இடங்களில் ஒரு வஸ்து மயம் பரவிக் கிடக்கிறது. அந்த வஸ்துவின் மேல் காலா பக்கத்தில் இருக்கும் அழுத்தம் ஏற்படுகிறது. கோடிக் கணக்கான வருஷம் அழுத்தம் இருந்து கொண்டிருக்கிறது. கடைசியாக அந்த வஸ்துவிலிருந்து வைரம் ஒன்று விளைகிறது. வைரத்தின் சரித்திரம் இது.

தமிழ் மக்களிடை உணர்ச்சி மயம் நெடுகிலும் இதயத்தில் பரவிக் கிடந்திருக்கிறது. பெரிய விஷயம் காரணமாக உணர்ச்சி மயம் ஏற்படலாம்; சாமான்ய சின்ன விஷயம் காரணமாகவும் உணர்ச்சி மயம் ஏற்படலாம். அந்த உணர்ச்சி மயத்தில் ஆயிரக் கணக்கான வருஷமாகவே பாஷை வந்து அழுத்தம் கொடுக்கிறது. பாஷை வந்து அழுத்தம் கொடுக்கக் கொடுக்க உணர்ச்சிக்கு இறுக்கம் உண்டாகிறது. கடைசியில் உருவம் உண்டாகி விடுகிறது. அது தான் கவி.

கவியினுடைய பிரகாசம் வைரத்தின் பிரகாசத்தை விட மேல். அழியாத் தன்மையது கவி — வைரத்துக்கும் உண்டு ஒரு வகையில் அழியாத் தன்மை.

ஆகவே, விஷயம் எதாகவும் இருக்கலாம். ஆனால் உணர்ச்சி மயம் இருந்தாக வேண்டும். உணர்ச்சி மாத்திரம் கவியாகாது. தமிழ்ப் பாஷை வந்து உணர்ச்சியோடு கலந்து உருவத்தைச் சிருஷ்டிக்கும் போதுதான் கவி பிறக்கிறது.

பாஷையைத்தான் கவிக்குச் சிருஷ்டி கர்த்தா என்று சொல்ல வேண்டும்.

இந்த ஒரு உண்மையை, அதாவது பாஷையின் செயலே கவி என்ற உண்மையை மனசில் வைத்துக் கொள்ளுவோமானால் (கவிஞரைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்தே பார்க்க வேண்டும்) உண்மைக் கவி இன்னதென்று உணர்ந்து



கொள்ள முடியும்; பூரணமாய் அனுபவிக்க முடியும். அல்லாதபக்ஷம் விஷயம்தான் பிரதானம் என்று பட்டுவிடும்; சிருஷ்டி தத்துவமும் மாயமாய் மறைந்து விடும். ஓவியம் மறைந்து விடும், கல்லும் செம்பும் மிஞ்சும்.

இந்த உண்மைகளைத் தமிழ்க் கவிகள் எளிதாய் எடுத்துக் காட்டும் நமக்கு.

கடவுளைப் பற்றி ரவீந்திரநாத் தாகூர் சொல்லும்போது, ''கடவுளே! எவ்வளவு எளிமையாக இருக்கிறீர் நீர். கவி ஒன்றைப் போலல்லவா எளிமையாய் இருக்கிறீர்!'' என்று வியக்கிறார். ''தமிழ்க் கவி ஒன்றைப் போலல்லவா இருக்கிறீர்!'' என்று சொல்லத் தோன்றும் நமக்கு.

இந்த எளிமை காரணமாகவே தமிழ்க் கவி நம்மோடு உறவு கொண்டாடி ஒட்டிக் கொள்ளுகிறது. ஒரு வாரத்திற்கல்ல. ஆயுள் முழுதுமே!

* *
*

தற்போது தமிழ் நாட்டில் ஒரு புது அனுபவத்தைப் பார்க்கிறோம். எவ்வளவு சிறிய கிராமமாய் இருந்தாலும், பட்டிக்காடாய் இருந்தாலும் சினிமாக் கொட்டகை வந்து முகாம் போட்டுப் போகிறது. சினிமாப் பாடல்கள் நாலா பக்கமும் கேட்கிறது.

ஆடு மேய்க்கிற பையன்கள், மாடு மேய்க்கிற பையன்கள் பாடல் துணுக்குகளைத் தினம் தினம் இரவில் கேட்கிறான், மாசக் கணக்காகவே கேட்கிறான். பாடல்கள் மனசில் பதிந்து விடுகின்றன. ஏதோ பாடல்கள், நல்ல பாடல்கள் என்று சொல்ல வேண்டியதில்லை. மெட்டோடு பாடல் பதிந்து விடுகிறது மனசில்.

ஊரில் இருந்து இரண்டு மைல் தூரத்தில் மேய்ச்சல் காடு. குன்றுகளுக்கிடையே காடு. அந்தப் பக்கமாக நாம் பிரயாணம் செய்ய நேரும் போது மேலே சொன்ன ஆடு மேய்க்கிற பையன் பாடுகிறான். சினிமாப் பாடல்களைத்தான்.

தமிழ் நாடு முழுதுமே நாட்டுப் புறங்களில் இந்த அனுபவத்தைப் பார்க்கலாம்.

ஆகவே, பாடல்கள் என்ன பாடல்களாய் இருந்தாலும், என்ன மெட்டுகளாய் இருந்தாலும், ஹிந்துஸ்தானி மெட்டாய் இருந்தாலும் சரி, இங்கிலீஷ் மெட்டாய் இருந்தாலும்





சென்ற மேமாதம் 31ல் சென்னை கோகலே ஹாலில் ஸ்ரீ கே. எஸ். பரமேசுவரன் அவர்களின் புதல்வி சௌ. கிருஷ்ண குமாரியின் நடன அரங்கேற்றம் சிறப்பாக நடந்தேறியது. மேற்படி அரங்கேற்றத்துக்குத் தலைமை வகித்த "கல்கி" ஆசிரியர் அவர்கள் கிருஷ்ண குமாரியின் நடனத்தை வெகுவாகப் பாராட்டிப் பேசினார். அங்கு கூடியிருந்த ரசிகர்கள் தங்களுடைய பாராட்டுதலைக் கரகோஷத்தின் மூலம் தெரிவித்துக் கொண்டனர்.

சரி, தமிழோடு கலந்து கொண்டுமானால் எளிதில் நாடெங்கும் பரவிவிடும் என்பது தெரிய வருகிறது. தமிழ் மெட்டாய் இருந்து விட்டால் சொல்லவே வேண்டாம், வெகு வகுவாய்ப் பரவி விடும். இனி:

***

தமிழ் நாட்டில் கோயில்களிலும், உற்சவங்களிலும், பூஜை மடங்களிலும் வீடுகளிலும் தேவார திருவாசகப் பாடல்கள் அழகான ராகங்களோடு ஒலித்துக் கொண்டிருக்கும். சிறு பையன்கள் எல்லாரும் கேட்டு அனுபவிப்பார்கள். அப்படியே போன போன இடமெல்லாம், ஆறோ குளமோ காடோ மேடோ அங்கொரடி இங்கொரடி என்று பாடுவார்கள். இது அந்தக் காலத்துத் தமிழ்நாட்டு அனுபவம்—அந்தக் காலம் என்றால் நூறு வருஷத்துக்கு முன் தான்.

இந்த அனுபவத்தில் இருந்து ஒரு ஆனந்த உணர்ச்சி உண்டாகிறது. அந்த உணர்ச்சியோடு தமிழ்ப் பாஷை கலக்கிறது; ஒரு தனியான அழகிய உருவம் பிறக்கிறது. பண்பட்ட தமிழ் செய்த ஒரு உருவம்.

***

மதுரைப் பக்கம் சாலை வழியாக நடந்து போகிறோம். ஏதோ வீணையை வைத்துத் தெளிந்த முறையில் ஒரு தமிழ்ப் பாடலை வாசித்த மாதிரி சப்தம் வருகிறது. சிறிது தூரம் போக வேறொரு பாடல் வருகிறது. மரத்தில் இருந்து. இன்னும் எட்டிப் போக இன்னும் ஒரு பாடல். இப்படியாகப் பாடல்கள் வந்து கொண்டிருக்கின்றன.

ஆடல் புரிந்தான்
அரன் என்றும்;

அடுத்தாற்போல் அப்பர், சுந்தரர், சம்பந்தர் இவர்கள் பாடலைப் பற்றி ஒரு பாராட்டு. அதன் பிறகு மதுரையில் சொக்கலிங்கேசுவரர் நரிகளைக் குதிரைகளாக்கி (வாரி—குதிரை) அந்தக் குதிரைகளுக்கே பலவித நடைகள் (காலப், டிராட், கான்டர்) பழக்கிப் பயிற்சி கொடுக்கிறார் என்பதாகப் பாடல்.

ஆடல் புரிந்தான்
அரன்என்றும், மூவர்தமிழ்ப்
பாடல் உகந்தான்
பரன்என்றும்—கூடலிலே
நன்னரி வாசிக்கு
நடைபயிற்றி னன்என்றும்
இன்னரிவா சிக்கும்
இனி.

[ஆடல் புரிந்தான் அரன் என்றும்: எங்குமாய் உள்ள சிற்றம்பலத்தில் நடனம் செய்தான் சிவபெருமான்; பரன்: இறைவன்.

கூடலில்: மதுரையில்; நன்னரி வாசிக்கு: நரிகளையே அழகிய குதிரைகளாகச் செய்து அவைகளுக்கு; நடை பயிற்றினன் என்றும்: பலவித நடைகளைக் கற்பித்தான் என்றும்; நரியைக் குதிரையாக ஆக்கினது புராணக் கதை. ஆனாலும் ஒரு பெரிய உண்மையைக் காட்ட வந்த கதை: நான் என்னும் ஆணவத்தை மாற்றிக் கடவுள் தத்துவமாக ஒரு ஆன்மாவை ஆக்குவது, நரியை அரபிக் குதிரையாக ஆக்குவது போலத்தான்! அவ்வளவு முடியாத காரியம்! ஆனாலும் இறைவன் சந்நிதியில் அது நிகழ்ந்து விடுகிறது என்ற பெரிய உண்மையை விளக்க வந்ததுதான் கதை.

இன்னரி வாசிக்கும் இனி: வீணையை வைத்து வாசிக்கக் கேட்கிறோம்—வாசிக்கிறது யார்? மக்கள், அல்ல இனிகள் தான்.]

சமயப் பாடல்கள் மக்களிடம், சாமான்ய மக்களிடமுமே இசையோடு வழங்கி வந்தன என்ற உண்மையைக் கிளியின் வாயிலாகச் சொல்லுகிறது பாடல், அற்புதமான கவி உருவம்!

# நீரிழிவு

## ஏழு நாட்களில்

## குணமாகும்!

எவ்வளவு காலப்பட்டதாயினும் மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான **வீனஸ் சார்ம் நீரிழிவு** (DIABETES) வியாதியை முற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிரங்கு ஆகிய இவைகளே இவ்வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். **வீனஸ் சார்ம்** ஆயிரக்கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவி யுள்ளது. உபயோகித்த மறுதினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய ஆங்கில காட்லாகிற்கு எழுதவும்.

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபால் செலவு இலவசம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**




எங்கும் விற்கப்படுகிறது

## பாரத் டிராவல் ஸர்விஸ் லிமிடெட்

கம்பெனியாரால் ஏற்பாடு செய்யப்பட்ட

## வட இந்திய யாத்திரை

50 நாட்கள் — 30 க்ஷேத்திரங்கள்

13-7-52ல் சென்னையை விட்டுப் புறப்பட்டு

பண்டரீபுரம், பூனா, பம்பாய், நாஸிக், டாகூர், உஜ்ஜெயினி, ஆக்ரா, மதுரா, டெல்லி, குரு க்ஷேத்ரம், ஹரித்வாரம், லக்னோ, அயோத்தி, அலகாபாத், ஸ்ரீகாசி, கயா, கல்கத்தா, பூரி, ஸிம்மாசலம், ராஜமேந்திரி, பெஜவாடா முதலிய இடங்களுக்குச் செல்லும்.

ஆடி அமாவாசைக்கு நாசிக் (கோதாவரி நதி) யில் தங்கும்.

மூன்றாவது வகுப்பு சார்ஜ் ரூ. 210

முழு விவரங்களுக்கு உடனே எழுதவும்:

## பாரத் டிராவல் ஸர்விஸ் லிமிடெட்

*(Tourist agents recognised by the Govt. of India)*

**11 & 12, ஸெகண்ட் லேன் பீச், மதராஸ்-1**

போன்: 2400 & 55400 தந்தி: EXCURSION

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



எந்த பொருளிலும் சிறந்ததையே வழக்கமாக உபயோகிக்கும் மனிதர்கள் ப்ளூ ஜில்லெட் பிளேடுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். பணத்தால் இதைவிட சிறந்ததை வாங்கமுடியாது. நீடித்த காலம் உழைப்பதும், மிகவும் கூராக தீட்டப்பட்டதுமான ப்ளூ ஜில்லெட் பிளேடுகள் உங்கள் தாடியை சுலபமாக நீக்கிவிடுகின்றன. ஆயினும் அதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. அதனால் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனவந்தனைப் போலவே க்ஷவரம்செய்துகொள்ளலாம்.



# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா




ஒரு காட்டில் ஒரு கடுவன் குரங்கு வசித்து வந்தது. அந்தக் குரங்கு, குரங்குகளுக்கு ஏற்பட்ட வக்கிர புத்தி சற்று அதிகமாகவே பெற்று விளங்கியது. அபாரமான இந்தக் குண சௌந்தர்யத்தினால் கடுவனைக் கண்டால் மற்ற பசு பக்ஷி ஜீவராசிகளுக்குப் பயம். எந்தச் சமயம் எப்படி வாலாட்டுமோ என்று நடுங்கிக் கொண்டேயிருக்கும் மற்ற ஜந்துக்கள். ஆனால் இந்தக் கடுவனுக்குத் தன்னுடைய வாலை மட்டும் ஒரு இடத்தில் கொஞ்சங் கூட ஆட்ட முடியவில்லை. அந்த இடம் எது தெரியுமா? அதனுடைய மனைவி ஸ்ரீமதி மந்தியினிடம்தான்!

மந்தியைக் கண்டால் தன் வாலை ஒட்ட நறுக்கினாற்போல் அடங்கி விடும். கீச்சு மூச்சு என்று கத்தாது. மந்தி கொடுக்கிற காய் கனிகளைத் தின்றுவிட்டுச் சிவனே என்று அடங்கிக் கிடந்துவிடும்! மந்தியின் இஷ்டப்படிதான் கடுவன் ஆடவேண்டியிருக்குமே தவிர, கடுவனுடைய விருப்பம் ஒன்றுகூடச் செல்லாது வீட்டில்!

காட்டு ராஜ்யத்தில் மிகவும் முக்கியமான ரகசிய போலீஸ் இலாக்காவின் தலைமை அதிகாரியாகக் கடுவன் குரங்கு இருந்து வந்தது. அதனால், அதன் வீட்டுக்கும் காரியாலயத்துக்கும் டெலிபோன் வசதி யிருந்தது. ஒவ்வொரு சமயம், ஆபீஸ் அலுவலாக இரண்டு நாள் மூன்று நாள் வீட்டுக்கு வர முடியாத சந்தர்ப்பமாகப் போய்விட்டால், "மந்தி, மந்தி! நான் இரண்டு நாள் வர மாட்டேன், ஆபீஸ் விஷயமாக இரண்டு நாள் ஏகப்பட்ட மரக் கிளைகளைத் தாவித் தாவிக் குதித்து ரோந்து சுற்ற வேண்டியிருக்கும்" என்று 'போன்' செய்துவிடும்.

அன்றைக்கொரு நாள், கடுவன் காரியாலயத்துக்கு, கடுவனுடைய பால்ய நண்பனான மர்க்கடம் வந்திருந்தது.

பழைய சினேகம் ஆதலால், பால்ய நினைவுகளைப் பற்றியெல்லாம் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தன. இரண்டு பேருமாகச் சேர்ந்து, ஊருக்குள் புகுந்து யார் வீட்டுக் குழந்தையோ அப்பம் வைத்துத் தின்று கொண்டிருக்கும் போது அடித்துப் பிடுங்கிக் கொண்டு வந்ததைப்பற்றியும், அது எவ்வளவு ருசியாக இருந்தது, பிறகு அதைப்போல ருசியான அப்பம் தனக்குக் கிடைக்காததைப் பற்றியும் கடுவன் ஏக்கத்துடன் நினைவு கூர்ந்தது.

"ஆனால் எனக்கு அந்தமாதிரி ஏக்கமே கிடையாது. அப்போது நீ கொஞ்சமாகிலும் எனக்குக் கொடுத்திருந்தால் அல்லவா, நான் இப்போது ஏக்கப் படுகிறதற்கு? அந்தக் குழந்தையிடமிருந்து பிடுங்கி வந்தது நான்; என்னிடமிருந்து பிடுங்கித் தின்றது நீ! இப்படி ஒரு அக்கிரமமா, இரண்டு அக்கிரமமா?—எத்தனை அக்கிரமம் செய்திருக்கிறாய்!" என்றது மர்க்கடம்.

"அப்படியா? எனக்குக் கொஞ்சங்கூட ஞாபகமில்லை. அப்படியெல்லாம் செய்திருந்தால், நான் என் மனப் பூர்வமான அனுதாபத்தையும் வருத்தத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்" என்றது கடுவன்.

மர்க்கடம், "சும்மா இப்படி, வெறும் வார்த்தையால் வருத்தம் தெரிவித்தால் போதாது. இன்றைக்கு ராத்திரி எனக்கு நல்ல விருந்து செய்து வைக்க வேண்டும். அப்போதுதான் உன்னை விடுவேன்" என்றது.

அப்போது பார்க்க வேண்டுமே, கடுவன் முகத்தை!

கடுவன், அந்த கிமிஷம் மர்க்கடம் வேறு ஏதாகிலும் கேட்டுத் தொலைக்கக் கூடாதா? போயும் போயும், வீட்டில் விருந்து பண்ணி வைக்கச் சொல்லியல்லவா கேட்கிறது! மந்தி இதற்கு ஒப்ப மாட்டாளே! என்ன செய்வாளோ! தன்னை எப்படியெல்லாம் அவமானப் படுத்துவாளோ என்று ஏங்கியது!

இருந்தாலும், "அதெற்கென்ன, விருந்து வைத்துவிட்டால் போகிறது! நீ சாயங்காலம் ஆறு மணிக்கு இங்கே வா, இரண்டு பேருமாகச் சேர்ந்தாற் போல் வீட்டுக்குப் போவோம்" என்று சொல்லியனுப்பியது கடுவன் குரங்கு.

மர்க்கடம் சென்றவுடன் மனசில் மிக்க பயத்துடன், கடுவன் குரங்கு தன் வீட்டுக்குப் போன் செய்தது.

வீட்டிலிருந்து டிரிங் டிரிங் என்று டெலிபோன் மணியடிக்கும் சத்தம் கேட்டது.

சற்று நேரத்துக்கெல்லாம் ரிஸீவரை எடுக்கும் சத்தமும் கேட்டது. அவ்வளவு

தான்! காரியாலயத்தில் கடுவன் பயபக்தியுடன் உட்கார்ந்து கொண்டது.

"ஹலோ யாரு..." என்று எதிர்த் தரப்பிலிருந்து குரல் வந்தது.

"நான்தான் கடுவன்..."

"என்ன விசேஷம்...?"

"ஒன்றுமில்லை...நீ காப்பி குடித்தாயிற்று? டிபன் என்ன பண்ணினுய்—கொய்யாக்காயா? தேங்காயா?"

"கொய்யாக் காய் இல்லை...மாங்காய், புளியங்காய், கோவைக்காய், இவைதான். கடைசியாகக் காப்பி குடிக்கவில்லை...லோவல் டின் குடித்து வைத்தேன்..."

"லோவல் டின்னு? பேஷ், பேஷ், இப்போது ரொம்ப உற்சாகமாக இருப்பாய் இல்லையா? லோவல் டப்பா மேலே எழுதியிருக்கிறனே 'இதைக் குடித்தால் புது உற்சாகம், குஷி யெல்லாம் ஏற்படும்' என்று. உனக்கு ஏதாகிலும் அப்படி ஏற்பட்டிருக்கிறதா?"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. அதற்கு மாருக ரொம்பவும் உற்சாகக் குறைவுதான் ஏற்பட்டிருக்கிறது."

"ஜுயைபோ!"

"ஆமாம்."

"அட ராமா..."

"ராமாவும் சோமாவும் இருக்கட்டும். நீங்கள் இப்போது போன் பண்ணியதற்குக் காரணம்?"

"விசேஷமாக ஒன்றுமில்லை. என் பால்ய நண்பன்......"

"உங்களைப் பார்க்க வந்திருந்தாரு?"

"ஆமாம்; ரொம்ப நாழிகையாகப் பேசிக் கொண்டிருந்தோம்."

"ஓகோ!"

"உன்னைப் பற்றி யெல்லாம் ரொம்ப விசாரித்தான்."

"ரொம்ப சந்தோஷம்."

"அவன் நம்முடைய வீட்டுக்குக்கூட..."

"வர வேண்டும் என்று விரும்பினுல் அழைத்து வருவதுதானே."

"நம்ம வீட்டிலே சாப்பிட வேண்டும்......"

"என்று சொன்னுரு? நல்ல விருந்தாப் பண்ணிப் போட்டுட்டால் போச்சு. இன்று ராத்திரியே அழைத்து வாருங்களேன்......'

கடுவனுக்குத் தலை கிறு கிறு என்று சுற்றத் தொடங்கியது. கடுவன் குரங்கு, தன் வாழ்க்கையில் தன் மனைவி மந்தி இவ்வளவு அன்பாகப் பேசி, விருந்ினரை உபசரிப்பதாகச் சொல்லிக் கேட்டதில்லை. அதற்குத் தலை கிறு கிறுவென்று சுற்றியதில் ஆச்சரியம் என்ன?

கடுவன் மௌனமாகியவுடனே, போனில் மட்டும், "ராத்திரி சாப்பாட்டுக்கு உங்கள் நண்பரை அழைத்து வருகிறீர்களா!" என்று கேட்டுக் கொண்டிருந்தது.

கடுவனுக்குத் திடீர் என்று ஒரு சந்தேகம் தோன்றியது. 'ஒருவேளை போன் நம்ம வீட்டுக்குப் போகாமல் வேறு யார் வீட்டுக்காகிலும் போய், வேறு யாராகிலும் நம் கேள்விகளுக் கெல்லாம் பதில் சொல்கிருர்களோ' என்று தோன்றியது.

ஆகவே, போனில், கேள்விமேல் கேள்வி கேட்கவும், "ஹலோ! 'ராங்கு' நம்பர்; இந்த வீடு அல்ல" என்று சொல்லிக் கடுவன் போனை வைத்துவிட்டது!

சாயங்காலம் ஆறு மணிக்கு மர்க்கடம் வந்தது. மர்க்கடமும் கடுவனும் காரியாலயத்தை விட்டுப் புறப்பட்டனர். கடுவன் மனசில் ஒரே பயமும் ஏக்கமும்தான். வீட்டுக்குப் போனவுடன் மந்தி எப்படிப் பாய்வாளோ! என்ன சொல்லித் திட்டுவாளோ என்று பயந்து கொண்டே சென்றது.

வீட்டுக்குப் போனதும், "வாங்கோ, வாங்கோ, மர்க்கட அண்ணு, நீ எப்போ வந்தே?" என்றது முகமலர்ச்சியுடன் மந்தி.

"என்ன தங்கச்சி, என்ன விளையாட்டு இது? பாவம், கடுவன் அண்ணு முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. உனக்காக வேண்டிக் காலையிலேயே இங்கே வந்து விட்டுப் போனதைப் பற்றி அண்ணுவிடம் சொல்லாமல் மூடிவைக்கும் பாடு எனக்குப் பெரும்பாடாகி விட்டது!" என்றது மர்க்கடம்.

இதைக் கேட்டதும், கடுவனுக்கு எல்லா விஷயமும் புரிந்து விட்டது. அதற்குண்டான ஆச்சரியமும் கொஞ்ச நஞ்சமல்ல. பிறகு சற்று நேரம் கழித்து, "மந்தி, உனக்கு ஏற்கெனவே மர்க்கடத்தைத் தெரியுமா?" என்று கடுவன் கேட்டது.

"அண்ணுவை எனக்கு இன்றைக்கு நேற்றைக்கா தெரியும்? அவர் அம்மா வயிற்றைக் கட்டிக் கொண்டு மரத்துக்கு மரம் தாவின நாளிலிருந்து தெரியுமே!" என்றது மந்தி.





ஜூன் 14 முதல்
பரணியின்
காதல்
தமிழ்
பானுமதி..நாகேஸ்வர ராவ்..
சென்னை கெயிட்டி, ஸ்ரீகிருஷ்ணா, சயானி
மற்றும் தமிழ் நாடெங்கும்
பூரண உரிமையாளர்கள்:
ஜி. பி. பிலிம்ஸ், பொறையார்
JALU BROS

# இலக்கியத் தம்பதிகள்

ஜடாதரன்

ஜன்னலுக்கு வெளியே நிலவு மனோரம்மியமாகக் காய்ந்து கொண்டிருந்தது. அந்த நிலவில் பளபளத்த புறக் காட்சிகளின் தனிச் சோபை அவன் மனத்தில் என்றுமில்லாத ஒரு கிளர்ச்சியை உண்டு பண்ணிக் கொண்டிருந்தது. ஜன்னலுக்கு ஓரமாகப் போடப் பட்டிருந்த சோபாவில் அவன் சாய்ந்து கொண்டிருந்தான். பரந்து கிடந்த அவன் மார்பில் அன்றைக்கு அவன் மனைவியிடமிருந்து வந்த கடிதம் காற்றில் படபடத்தது. நீல வானத்தை அவன் நோக்குகையில், அழகிய அவன் மனைவியின் உருவந்தான் அவன் கண் முன் நிறைந்து நின்றது. மார்பில் கிடந்த அவன் கடிதத்தை அவன் அழுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தானெனினும் ஒரு மூலையில் அவன் நெஞ்சத்தைப் போலவே அது அடித்துக் கொண்டது. அவள் எழுதியிருந்தாள்:

"உங்களைப் பிரிந்து மாதம் இரண்டாகி விட்டது. ஆனால் அது இரண்டு யுகங்கள் தனித்திருப்பது போலத் தோன்றுகிறது. தம்பதிகள் விலகி யிருக்கும் போதுதான் பரஸ்பரம் பரிவும் பாசமும் அதிகரிக்கிறது என்று நீங்கள் சென்ற கடிதத்தில் எழுதியிருந்ததையே என் உள்ளமும் எதிரொலிக்கிறது. எனக்கு எப்போதுமே உங்கள் நினைவுதான். பரிகாசம் செய்யாதீர்கள். அப்பாவும், அம்மாவும் காட்டும் அளவற்ற அன்பைக்கூட மறந்து தாங்கள் வாராவாரம் எழுதும் கடிதங்களில்தான் நான் ஆறுதல் அடைகிறேன். என்ன இருந்தாலும் உங்கள் மாதிரி எனக்கு இப்போதெல்லாம் எழுத வரவில்லை என்ற குறையை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது."

அவனைப் போன்று அவளுக்கு எழுத வரவில்லை என்று அவளே எழுதியிருந்ததை நினைவு கூர்ந்ததும், அவன் ஒரு முறை தனக்குள்ளேயே சிரித்துக் கொண்டான்.

அவன் நெஞ்சம் விம்மித் தணிந்தது. இத்தனை நேரமும் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த சிந்தனை வண்டு இதய மலரில் சேகரம் செய்து வைத்திருந்த நினைவுத் தேனை நாடிப் பறந்தது.

★

அப்போது அவன் ஒரு ஆரம்ப எழுத்தாளன். ஆழ்ந்த கருத்துக்களைக் கொண்ட கதைகளை சிருஷ்டி செய்வதில் அவனுக்கு அலாதி ஊக்கம். "ராஜும்" என்ற புனைப் பெயரில் அவன் கதைகள் பிரபலமான பத்திரிகைகளி லெல்லாம் வெளி வரத் தொடங்கின. வளம் மிகுந்த கற்பனையில் மிளிர்ந்த அவன் கதைகள் வாசகர்களுக்கு ஒரு நல் விருந்தாக அமைந்தது!

அந்தச் சம்பவம் என்றென்றும் அவன் மறக்க முடியாததுதான். அவனுடைய சொந்த வாழ்க்கையின் திருப்பமல்லவா அது! "ஜனனி" என்ற பத்திரிகையில் அவன் எழுதியிருந்த 'பாசமும் பிணைப்பும்' என்ற கதை மனோதத்துவக் கதை வரிசையில் ஒரு தனி ஸ்தானத்தை அடைந்து விட்டிருந்தது. கதை வெளியான ஒரு வாரத்துக்கெல்லாம் அவன் சற்றும் எதிர்பாராத நிலைமையில் அந்தக் கடிதம் அவனுக்கு வந்தது. அதுவரையில் எந்த ரஸிகனும் அவனுக்குப் பாராட்டுக் கடிதம் அனுப்பியது கிடையாது. இப்போது வந்த கடிதத்தினால் அவன் இலக்கிய உள்ளம் சொல்லொணாத மகிழ்ச்சியை அடைந்தது. அதுவும் சாதாரணமான பாராட்டுதலா அது!

முத்து முத்தான கையெழுத்தில், கல்லூரி மாணவி ஒருத்தியின் புகழ்மாலை கடித ரூபமாக அவனுக்கு வந்திருந்தது!

'ராஜும்' என்ற புனைப் பெயர் ஒரு பெண்மணியினுடையது என்ற எண்ணத்தில் அந்த ரஸிகை எழுதியிருந்தாள். அவனுக்குச் சிரிப்புத் தாளவில்லை. தன் புனைப் பெயரை நினைத்துத் தன்னைத் தானே புகழ்ந்து கொண்டான். பலமுறை திரும்பத் திரும்ப அக் கடிதத்தைப் படித்தான்.

"அன்பார்ந்த சகோதரி 'ராஜும்' அவர்களுக்கு, தங்கள் கதையை வெகுவாக ரஸித்தேன். மனோதத்துவக் கதைகளில் எனக்கு எப்போதுமே ஒரு ஈடுபாடு உண்டு. தங்களைப் போன்ற ஒரு நல்ல எழுத்தாளரின் பரிச்சயம் எனக்குக் கிடைக்குமேயானால், அது என் பாக்கியமே. நான் ஒரு கல்லூரி மாணவி. உங்களுக்குச் சௌகர்யப்பட்டால் நாம் நேரில் சந்தித்து இலக்கிய சம்பந்தமாகப் பேசுவோம்."

பெண்களிடம் அதிகம் பழகியறியாத அவனுக்கு அந்தமாதிரி ஒரு பாராட்டுதல் இனம் தெரியாத இன்ப எண்ணங்களைத் தோற்றுவித்தது. அவன் வாலிப உள்ளம் துள்ளியது. விதம் விதமான யோசனைகள் அவன் மனத்தில் நிழலாட்டம் காட்டின. கடைசியில் அவன் ஒரு முடிவுக்கு



வக்கீல் :—ஏன் மிஸ்டர், உங்கள் வழக்கிலே சாட்சி சொல்லுவதற்கு உங்களுடைய மாமாவையே சாட்சியாகப் போட்டால் என்ன? வந்து நிற்கச் சொல்லுங்களேன் அவரை!

கட்சிக்காரர் :—ஐயையோ! அவர் வேண்டாம், ஸார்! அவர் மனசிலே என்னவோ நம்மை அரிச்சந்திரன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறவர்......! வேறே ஆசாமியைப் பார்க்கலாம், அதுதான் நல்லது!



வந்தான். குறிப்பிட்ட தினமொன்றில், தமிழ்த் தாத்தாவின் சிலைக்கு நேர் எதிரே கடற்கரையின் மணல் வெளியில் அவனைச் சந்திக்கும்படி பதில் கடிதம் எழுதி அனுப்பி விட்டாள்!

அந்த நாளும் வந்தது!

பொன்னிற மேனியளாய், கருங் கூந்தலின் குழற் கற்றைகள் இலேசாகப் புரள, தரு தரு வென்று அலையும் காந்தக் கருவிழிகளுடன், தனிச் சோபை கொண்டு பொலிவுற்றுத் திகழ்ந்த அவள் அழகைக் கண்டு அவன் சொக்கிப் போய் விட்டான். அவளெதிரே அவன் நிற்கையில் அவனுக்குப் பேச்சுக் கிளம்பவில்லை. தடுமாறினான்.

"நீங்கள் தானே........."

"ஆமாம்; நீங்கள் "ராஜத்தின் சகோதரரோ!"

'ஹோ' வென்று இரையும் கடலலைகளின் சுருதியில் அவள் மென்குரல் உள்ளத்தைத் தொட்டு எங்கேயோ வான வெளிக்குத் தூக்கிச் சென்று விட்டது. அவள்தான் "ராஜம்" என்பதை அவனுக்கு எடுத்துரைப்பதற்குள் அவன் பட்டபாடு சொல்லி முடியாது.

அவள் வித்தியாசமாக நினைத்துக் கொள்ளவில்லை. மிகவும் சுவாதீனமாகவே உரையாடினாள். வசீகரம் வாய்ந்த அவன் தோற்றத்தின் கவர்ச்சியில் அவளும் மயங்கித்தான் போனாள். இலக்கிய ரஸனையில் ஆரம்பித்த இந்த அறிமுகம் அத்துடன் நின்று விடவில்லை.

அழகனும் அழகியும் தங்கள் உள்ளங்களையும் ஒன்று படுத்திக் கொள்ள முயன்றார்கள். அந்த முயற்சியைத் தடை செய்யாமல் அவர்களின் பெற்றோர்கள் அநுமதி தந்தனர். அவனும் அவளும் கலியாணம் செய்து கொண்டு தம்பதிகளாயினர்.

இந்த இடத்தில் சிந்தனை ஸ்தம்பித்து நின்றது. இருக்கையிலிருந்து எழுந்து அவன் ஒரு டம்ளர் தண்ணீர் குடித்து விட்டு வந்தான். தற்செயலாக அவன் பார்வை மணமான புதிதில் அவர்களிருவரும் எடுத்துக் கொண்ட போட்டோவின் மேல் லயித்தது. அறையிலுள்ள மின்சார விளக்கைப் போட்டான். பளிச்சென்று படத்தின் மீது பிரகாசமான ஒளி பாய்ந்தது. அவளை வெறித்து நோக்குகையில் அவன் உள்ளம் விகசித்தது!

அவர்களுடைய ஆதர்ச வாழ்வுக்கு எடுத்துக் காட்டுதான் அந்தப் படம். பளிச்சென்று பல் வரிசை தெரியச் சிரித்துக் கொண்டு அவன் அரவணைப்பில் அவள் காட்சியளித்தது மனமோகனமாய்த் திகழ்ந்தது. மணவாழ்க்கையில் அவர்கள் ஏமாற்றமே அடையவில்லை.

தன்னுடைய அழகினாலும், சாதுர்யத்தினாலும் அவள் அவனை அப்படியே ஸ்வீகரித்துக் கொண்டு விட்டாள். அந்த ஸ்வீகாரம் அவனுக்கு வேண்டித்தான் இருந்தது. அவள் நல்ல ரஸிகை. அவன் ஒரு கலைஞன்.

அவளுடைய அழகில் பெரிதும் மயங்கிப் போய்க் கொஞ்ச நாட்களுக்கு எழுத்தையே அவன் மறந்து விட்டான்.

நாட்கள் பறந்தன.

அவள் எழுத ஆரம்பித்தாள். எழுதிக் கொண்டே இருந்தாள். பெயரும் புகழும் அவளைத் தேடிச் சரண் அடைந்தபோது அவன் மிகவும் பெருமை கொண்டான். நாடெங்கும் அவள் கதைகளைப் பற்றித்தான் பேச்சு! "சுஜாதை" எழுதும் கதைகளை ஒவ்வொரு வீட்டிலும் விழுந்து விழுந்து படிக்க ஆரம்பித்தார்கள்.

ஆரம்பத்தில் அவள் புகழை அவன் வெகுவாக ரஸித்தான். "தன்னைக்கூட அவள் மிஞ்சிவிடுவாள்" என்று அவன் உள் மனத்தில் ஓயாது ஒலிக்கும் எண்ணத்தை அவன் பெருமிதமாகவே எடுத்துக் கொண்டான்!

ஆனால்......!

காலப் போக்கில் அவள் மீது அவனுக்கு இலேசான வெறுப்பு படர ஆரம்பித்தது. புகழுக்கு ஏற்றவாறு, அவள் சமூகத்தில் கலந்து பழகும் நிலைமை வந்த போது அவன் மனத்தில் பொருமை ஏற்பட்டது. பத்திரிகைகளின் ஆசிரியர்கள் சிலரோடு அவள் அடிக்கடி இலக்கிய சம்பந்தமாகச் சம்பாஷணை நடத்தியதைக் கூட அவன் அதிகப் பிரசங்கித்தனமாக எடுத்துக் கொண்டான்! காரணமில்லாமல் அடிக்கடி அவளிடம் பொருமினான். வெளி உலகம் அவளை ஓயாது புகழுகையில், அவன் உள்ளத்தில் எரிச்சல் குமுறியது. அவள் அவனுக்கு மனைவிதான். மனைவியின் புகழ் கணவனுக்கும் புகழ்தான். என்றாலும், இயல்பாகவே இலக்கிய மனத்தில் தோன்றிவிடும் பொருமைத் தீ அவன் மனத்தையும் சுட்டு விட்டது!

அவனுடைய நடத்தையில் கண்ட மாறுதல்களைக் குறித்து அவள் கொஞ்சம்கூடக் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. அவன் மனத்தில் விஷ வித்து ஊன்றி விட்டதை அவள் உணரவேயில்லை. இலக்கிய வளர்ச்சியில் அவள் கொண்டிருந்த பேரார்வம் அவன் தன்மைகளைக் குறிப்பாக உணரும் நிலைமையைக் கூட மறக்க அடித்து விட்டது.

ஒரு நாள் இரவு பத்து மணிக்கு அவன் வீடு திரும்பினான். அவள் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள். அவன் சிடுசிடுத்தான். அவன் முகத்தில் புன்னகையை மலரச் செய்ய ஏதாவது புது விஷயங்களைக் கூறி அவனை உற்சாகப் படுத்த நினைத்தாள் அவள். அவள் வழக்கமாக எழுதும் பத்திரிகையில் ஒரு நாவல் போட்டியின் முடிவு அன்றைக்கு வெளியாகியிருந்தது. அந்தப் போட்டியில் 'சுஜாதை'க்குத்தான் முதல் பரிசு என்று சொல்லவும் வேண்டுமோ!

ஆசிரியரின் பாராட்டுக் கடிதத்தை அவன் அவளிடம் அக மலர்ச்சியோடு கொடுத்தாள். அதைப் படிக்கையில் அவன் உள்ளம் எரிமலைக் குழம்பு போலக் கொதித்தது. பிறன் மனைவியைப் பாராட்டி அந்த ஆசிரியர் அதிகப் பிரசங்கித்தனமாக நடந்து கொண்டது போலவே அவனுக்குத் தோன்றியது. ஆத்திரம் அவன் அறிவுக் கண்களைக் கட்டிவிட்டது. அவன் ஆண்மையே அவமான மடைந்து விட்டதைப் போன்ற கோர எண்ணம் அவனுக்குத் தோன்றியது.

கடிதத்தைச் சுக்கு நூறாக அவன் கிழித்தெறிந்தான். சுஜாதை கதி கலங்கி நின்றாள்!

“உங்களுக்கு என்ன திடீரென்று......!”

“பைத்தியமா.........என்று கேட்டு விடேன்! பாதகி! நீயும் உன் இலக்கியமும்! உன்னைத் தொலைத்து விட்டுத்தான் வேறு வேலை” என்று அர்த்தமில்லாமல் இரைந்தான் அவன்!

அவன் அவளிடம் கொண்டிருந்த பரிவும் பாசமும் இவ்வளவு சீக்கிரத்திலா மறைந்து விட்டது! அவளுக்கும் ஆத்திரம்தான் வந்தது. அவள் தணிந்து போக இஷ்டப்படவில்லை. ஆண்களோடு பெண்களும் சரி நிகர் சமான உரிமைக்குப் பாடுபடுபவள் அல்லவா அவள்!

அவளுக்கும் அவனுக்கும் உள்ள மனத்தொடர்பு இனி எப்படித்தான் புதுப்பிக்கப் போகிறதோ!

★

நிலவு மங்கியது! அவன் மறுபடியும் சிரித்துக் கொண்டான். அன்று அவன் நடந்து கொண்ட விதத்திலிருந்து அவள் அவனைப் பற்றி வேறு விதமாகவே நினைத்தாள். தன் தாம்பத்திய வாழ்க்கையே பாழாகிவிடும் என்று நம்பினாள்! அவள் நம்பிக்கையில் தோன்றிய மாறுதலைக் குறித்து அவனே ஆச்சரியமடைந்தான். பெண்களே விசித்திரமான சுபாவம் உடையவர்கள் போலும்! பின் எப்படி அவள் மாறினாள்! இன்னமும் அவனுடைய அந்தக் கேள்விக்கு விடையை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை!

ஒரு நாள் அவள் தன் தோழியின் வீட்டில் நடந்த கொண்டாட்டத்தில் கலந்து கொண்டு விட்டுத் திரும்பத் திட்டமிட்டிருந்தாள். பிரபல ஸ்திரீ எழுத்தாளர் ‘சுஜாதை’யைப் பார்ப்பதற்கென்றே அந்தத் தோழியின் வீட்டில் விசேஷமாகப் பெண்மணிகளின் கும்பல் அதிகரித்திருந்தது. ‘சுஜாதை’ எல்லோருடனும் கலகலப்பாகவே பழகினாள். விடை பெற்றுக் கொண்டு அவள் கிளம்பும்போது கும்பல் இன்னமும் கலையவில்லை. அவரவர்கள் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து உரையாடிக் கொண்டிருந்தனர். வெளியே சென்றுவிட்ட ‘சுஜாதை’ புத்தகம் ஒன்றை மறதியாக விட்டுச் சென்ற காரணத்தினால் மறுபடியும் அந்த வீட்டுக்குள் நுழைந்தாள். குறிப்பிட்ட ஒரு பெண் கும்பல் அவளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தது.

“சுஜாதையின் நாவல் ஆரம்பத்தை இந்தவாரம் நீ படித்தாயோ! எப்படியம்மா அவளுக்கு இவ்வளவு நன்றாக எழுத வருகிறது! அவள் அகத்துக்காரர் ரொம்பவும் கெட்டிக்காரராமே!”

மற்றொருத்தி சொன்னாள்.

“ஆமாம்! நீதான் மெச்சிக்கொள்ளணும், அவ அகத்துக்காரர் சாமர்த்தியத்தை! பெண்டாட்டி இலக்கியம், கதை, நாவல் என்று ஊரெல்லாம் புகழ இளித்துக்கொண்டு சுற்றுகிறபோது அதைப் பார்த்துக் கொண்டு ஒருத்தன் இருக்கானே! எங்க அகத்துக்காரரா யிருந்தால்......”

“அவளுக்கு இருக்கிற மதிப்புக்கு நாலுபேரோடு பழகினால் என்ன குற்றமாம்! கன்னா பின்னா வென்று எதையாவது சொல்லி நம்மை நாமே ஏன் தாழ்த்திக் கொள்ள வேண்டும்!”

பொறாமைக் குரல் மீண்டும் எதிரொலித்தது!

‘நெருப்பு இல்லாமல் ஒன்றும் புகையாது. அவளுக்கு நடத்தையே சரியில்லையாம். அவள் புகழுக்கு இதுவும் ஒரு காரணமாம். நாலுபேர் சொல்லிக் கொள்வதைத்தான் நானும் சொல்லுகிறேன். இல்லாவிட்டால் எனக்கேன் இந்த வம்பெல்லாம்!”

சுஜாதைக்கு உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. இதற்கு மேல் அவள் அந்தப் பேச்சைக் காது கொடுத்துக் கேட்க விரும்பவில்லை. உலகமெல்லாம் அவள் முன் சுழன்றது. அவள் அடைந்திருந்த புகழ், கௌரவம், சமூக அந்தஸ்து எல்லாமே அந்தச் சுழற்சியில் பறந்து மூலைக்கு ஒன்றாகச் சிதறின. நிலை தடுமாறித் தட தடவென்று அவள் புகழ் ஏணியின் உச்சிக் கிளையிலிருந்து விழுந்து கொண்டிருந்தாள். எவனிடமிருந்து அவள் சக்தி பெற்றுப் புது உருவம் கொண்ட புதுமை இலக்கியப் பெண்ணாகத் திகழ்ந்தாளோ அவனுக்கே அல்லவா அவளுடைய புகழ் மாசு கற்பித்து விட்டது!

அன்று இரவு.

அவனுடைய மார்பில் அவள் முகம் புதைத்து விம்மி விசும்பினாள்!

“என்னை நீங்கள் மன்னித்து விடுங்கள்! உங்களையே நான் இத்தனை நாள் மறந்துவிட்டு, என்னைப் பற்றியே பெரிதாக நினைத்துக் கொண்டிருந்து விட்டேன். எனக்குப் பேரும் புகழும் வேண்டாம். உங்கள் புகழின் நிழலிலேயே நான்



நண்பர்:—இன்றைக்கு என்ன கிழமை, ஸார்!

மற்றவர்:—இன்றைக்கா? இதோ சொல்கிறேன். ‘இன்றைக்கு எங்கள் ஆபீஸ் ஹோட்டலில் என்ன டிபன்? ......பொங்கல், போண்டா, ஓமப்பொடியா? சரிதான்!’ இன்றைக்கு வெள்ளிக்கிழமை ஸார்!

ஒதுங்கிக் கொள்கிறேன். பெண்ணைப் பிறந்து தனிமையாக இயங்கினால் அவமானமும், அகௌரவமும் தான் நிலைத்து நிற்கிறது. உங்களை அண்டியிருக்கிறவரை தான் எங்களுக்குப் பெயரும் புகழும்!''

அவனுக்குப் புதிராக இருந்தது. நீண்ட நாட்களாக அவனுள் கவிந்து கொண்டிருந்த பொறுமைத் திரையை அவள் கண்ணீர் அவிழ்த்து விட்டது. அப்படியே அவளை வாரி அணைத்துக் கொண்டான். அந்த அரவணைப்பின் மென் சுகம்தான் அப்போது அவனுக்கு லட்சியமாக இருந்தது!

நாட்கள் பறந்தன.

மீண்டும் பத்திரிகைகளில் 'ராஜம்' தலையெடுத்தான்! கணக்கம் கொண்டிருந்த அவனுடைய உற்சாகமெல்லாம் சிலிர்த்து எழுந்து புது உருவம் பெற்றது. அவன் பேனாவினின்றும் உதிர்ந்த கற்பனைகளில் கமழ்ந்த தனி இலக்கிய மணத்தின் மயக்கத்தில், வாசகர்கள் 'சுஜாதை'யை மறந்து விட்டனர். அடர்ந்துவிட்ட உமையவளைத் தாங்கிக் கொண்டு அண்ட பகிரண்டமெல்லாம் நடுங்கத் தாண்டவம் புரிந்த சிவனைப்போல, அவன் புதுவெறியில் ஈடு இணையற்ற இலக்கியங்களைச் சிருஷ்டி செய்துகொண்டு தன் புகழையும் வானளாவ உயர்த்திக் கொண்டான்.

சிந்தனை கலைந்து அவன் விடுபட்டான்! நிலவு சரிந்து கொண்டிருந்தது. அவன் படுக்கைக்குத் தனியாக உறங்கச் செல்லும்போது இரவு வெகு நேரமாகி விட்டது. என்ன நினைத்துக் கொண்டோ, மனைவியின் அன்றையக் கடிதத்துக்குப் பதில் எழுதி வைத்துவிட்டுத்தான் அவன் உறங்கச் சென்றான். அதன் ஒரு பகுதி அவன் மனத்தில் ஒலித்துக் கொண்டிருந்தது.

''......என்னைப் போல உனக்கு எழுத வரவில்லை என்று நீ குறைப்பட்டுக் கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. என் எழுத்தின் சக்திக்கு நீதான் உண்மையான தூண்டுகோல்; நான் எழுதுவதை நீ ரசிக்கையில், அதனின்றும் எழும் ஒரு புதுச் சக்தியில்தான் நான் இயங்குகிறேன். என்னை இயக்கும் ஒரு சக்தியின் மூலாதாரமாக நீ இருக்கையில், நான் அடையும் புகழ்தானே உன் லட்சியம்? என் புகழுக்கு நீதான் காரணம். இந்த உன்னத ஸ்தானத்தை நீ அடைந்திருக்கும் போது, உன்னுள் வேறு எந்தக் குறைக்கும் இடமில்லையல்லவா?''

# படித்துப் பாருங்கள்!

## வியாசர் விருந்து

ராஜாஜி அவர்கள் தமிழ் நாட்டிற்கு எவ்வளவோ தொண்டுகள் செய்திருக்கிறார்கள். அவற்றுள் எல்லாம் மிக முக்கியமானது எது என்று கேட்டால் அவர் தலைமை வகித்து நடத்திய வேதாரண்யம் உப்பு சத்தியாக்ரஹப் போரைச் சிலர் குறிப்பிடக் கூடும். பாரத நாட்டில் மிக உயர்ந்த பதவிகளை எல்லாம் வகித்து விட்டுத் தள்ளாமை காரணமாக எழுபத்திரண்டாம் வயதில் ஓய்வு எடுத்துக் கொள்ள வந்த சமயத்தில் இப்போது மறுபடியும் சென்னை மாகாணத்தின் முதன் மந்திரி வேலையை ஏற்றுக் கொள்ள முன் வந்திருக்கிறாரே, இதுவே மிகப் பெரிய தொண்டு என்று இன்னும் சிலர் சொல்லுவார்கள்.

ஆனால் தமிழ் இலக்கியத்தில் பற்றுக் கொண்டவர்கள் வியாசர் விருந்து என்னும் அற்புதமான நூலை ராஜாஜி இயற்றி அளித்ததுதான் தமிழுக்கும் தமிழ் நாட்டிற்கும் ராஜாஜி செய்த தலை சிறந்த தொண்டு என்று சொல்லுவார்கள்.

மேற்படி நூல் எழுத நேர்ந்த வரலாற்றைக் குறித்து ராஜாஜி நூலின் முன்னுரையில் எழுதி இருப்பதாவது:

''இரண்டரை யாண்டுகளுக்கு முன் ஒரு நாள் 'முதல் தாம்பூலம்' என்று பெயரிட்டுச் சிசுபாலன் கதையை 'கல்கி' இதழ் ஒன்றுக்கு எழுதினேன். அதைப் பார்த்து விட்டு 'மகா பாரதத்தில் இவ்வளவு அழகாக நேற்று நடந்த விஷயங்களைப் போல் சித்திரிக்கப் பட்டிருக்கிறதா! அப்படியானால் பாரதம் முழுவதும் தொடர்ச்சியாக வாரா வாரம் இப்படியே எழுதிக் கொண்டு போகலாமே!' என்று ''கல்கி'' ஆசிரியரும் திரு டி. கே. சி யும் சொல்லி என்னைத் தூண்டினார்கள். அன்புக்குரிய தமிழ் மக்களை எதிரில் வைத்துக் கொண்டு கதை சொல்லுவது போல் மனத்தில் எண்ணி இந்த வியாசர் விருந்தை வாராவாரம் பக்தியோடு எழுதி வந்தேன். 'கல்கி' வாசகர்கள் அனைவரும் உற்சாகத்துடன் படித்து அனுபவித்து வந்ததாகவே நம்புகிறேன்...''

மேலே 'முதல் தாம்பூலம்' என்னும் கட்டுரையைப் பற்றிக் குறிப்பிடப் பட்டிருக்கிறதல்லவா! அதில் நேற்று நடந்த விஷயங்களைப் போல் அழகாகச் சித்திரிக்கப் பட்டிருக்கும் சம்பவம் என்ன என்பதை நேயர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறோம்.

தரும புத்திரர் யாகத்துக்காகக் கூட்டிய சபையில் கண்ணனுக்கு முதல் தாம்பூலம் அளிக்கப்பட்டது. அது சிசுபாலனுக்குப் பொறுக்கவில்லை. சிசுபாலன் எழுந்து நின்று ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவையும் அவருக்கு முதல் மரியாதை செய்த பஞ்ச பாண்டவர்களையும் கடுமையாகத் திட்டி விட்டு, துரியோதனர் முதலிய மற்ற ராஜாக்களைப் பார்த்து 'வாருங்கள் வெளியே!'' என்று சொல்லி அவர்களையும் கூட்டிக் கொண்டு சபையிலிருந்து ''வாக் அவுட்'' பண்ணினான்!!!

இது நேற்று சென்னைச் சட்ட சபையில் நடந்த சம்பவத்தைப் போலவே இருக்கிறதல்லவா?

மகா இதிகாசங்களின் பெருமை இதுதான். எந்தக் காலத்தில் நடந்ததானாலும், இன்றைக்கும் பொருத்தமாக இருக்க வேண்டும்.

அப்படிப் பட்ட உலக மகா இதிகாசங்களில் தலை சிறந்த இதிகாசம் மகாபாரதம் என்பது உலகம் ஒப்புக் கொண்ட உண்மை. மகாபாரதத்தை ருஷ்ய அரசாங்கத்தார் கூட ருஷ்ய பாஷையில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள் என்றால், அதிகம் சொல்வானேன்!

அந்த மாபெரும் நூலின் சாரமான பகுதிகளையெல்லாம் பிழிந்தெடுத்து வியாசர் விருந்து என்ற பெயரால் ராஜாஜி தமிழர்களுக்கு அளித்தார்.

ஏழு வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட இந்நூல் பிற்பாடு ஆங்கிலத்திலும், இந்தி, வங்காளி, குஜராத்தி, மலையாளம் முதலிய பாஷைகளிலும் மொழி பெயர்க்கப் பட்டிருக்கிறது.

தமிழில் இரண்டு பதிப்பு செலவாகி இப்போது மூன்றாம் பதிப்பு அழகிய முறையில் வெளியாகியிருக்கிறது. வெளியிட்டவர்கள்: பாரதி பதிப்பகம், தியாகராயநகர், சென்னை 17; விலை ரூ. 10.



மற்றெந்த ரகத்தையும் விட
பெருவாரியான மக்கள்
பிரிட்டானியா
பிஸ்கோத்துகளையே
வாங்குகின்றனர்.
சிறந்த பிஸ்கோத்து
பிரிட்டானியா




NUMBER TEN
VIRGINIA
MAGNUMS
№10
நல்ல
சிகரெட்
வாங்க
ஏன்
அதிக விலை கொடுக்கிறீர்கள்
50 விலை ரூ 1/4 ✯ 10 விலை 3½ அணா
உள்ளூர் வரி அலாதி
Issued by the National Tobacco Co. of India Ltd., Licensees of James Carlton Ltd., London. Cigarettes made in India.
ACI
N.T.N-4T




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S 182-50 TM




# அருவிக்கரை ஆசிரமம்

'சுதர்சன்'

மொழிபெயர்ப்பு: ரா. வி

## 8. அரிய பொக்கிஷம்

அதற்குப் பின் ஏழெட்டு நாட்கள் சென்றன. எங்களுக்கிடையே ஏற்பட்ட அறிமுகம் வர வர நெருக்க முற்றது. நான் தவறினாலும் தவறலாம், ரூப்சந்தும் தேவகியும் தினம் மாலை வேளைகளில் என் வீட்டுக்கு வருவது தவறாது. தினம் இரண்டொரு மணி நேரமாவது அவர்கள் என்னுடன் வார்த்தையாடிவிட்டுப் போவார்கள். அவர்களுடன் பேசிக்கொண்டிருக்கும் பொழுது, எனக்குப் பொழுது போவதே தெரியாமல் பறந்து விடும். அவர்களை நான் எத்தனை நேரம்தான் நிறுத்தி வைக்க முடியும்? ஆகவே, கடிகாரத்தின் முட்கள் ஓடாமல் நின்றுவிடக் கூடாதா என்று எண்ணுவேன். ஆனால் என்ன அசட்டு எண்ணம்! காலத்தின் ஓட்டத்தை இதுவரை யார் தடுத்திருக்கிறார்கள்? காலச் சக்கரத்தின் சுழற்சியை நிறுத்துவது என்பதுதான் சாத்தியமா?

அவர்கள் இந்தியர்களின் குடும்ப வாழ்க்கையை வர்ணிக்கும் பொழுது என் கண்களிலே நீர் திரை கட்டி நிற்கும். அந்தத் திரையிலே நிழல் படம் போல இந்தியக் குடும்ப வாழ்க்கையின் ஒவ்வொரு காட்சியும் தத்ரூபமாகத் தோற்றமளிக்கும். ஆயினும் அவர்கள் சொல்லுவதில் எனக்கு அப்படியே நம்பிக்கை விழுவதில்லை.

ஆகவே ஒரு நாள் நான், "நீங்கள் சொல்வது ஒரு அழகிய கட்டுக் கதைபோல் அல்லவா தோன்றுகிறது!" என்றேன்.

அதைக் கேட்டதும் தேவகி இலேசாகப் புன்முறுவல் பூத்தவாறு, "கட்டுக் கதை போல் தோன்றுகிறதா? ஆம், உங்களுக்குக் கட்டுக் கதை போல்தான் தோன்றும். ஏனெனில் நீங்கள் மேல் நாட்டிலே பிறந்திருக்கிறீர்கள். மேல் நாட்டு மண்ணிலேயே வளர்ந்தும் இருக்கிறீர்கள். இன்றும் மாயைதான் இங்கு ஆட்சி செலுத்திக் கொண்டிருக்கிறாள். மேல் நாட்டு மண்ணிலே பிறந்து, மேல்நாட்டு மண்ணிலே வளர்ந்து மாயையின் ஆட்சிக்கு உட்பட்டு வாழும் உங்களுக்குப் பாரதத்தின் பெருமையை எத்தனைதான் எடுத்து உரைத்தாலும் புரியுமா? பாரதநாட்டின் பண்டைய பண்பாட்டையும் அது ஆத்மீகத் துறையிலே கண்டிருக்கும் வளர்ச்சியையும் பற்றி உங்களுக்கு ஒன்றுமே தெரிந்திருக்க நியாயம் இல்லைதான். ஆகவேதான் இப்படிப் பேசி விட்டீர்கள். அங்கே ஒரு தடவை சென்று பார்த்து வந்தால் உங்கள் புறக்கண்கள் மட்டும் அல்ல; அகக் கண்களும் தாமாகவே திறந்து கொள்ளும். அப்புறம் அங்கிருந்து திரும்பி வரவே உங்களுக்கு மனம் வராது. அங்கேயே ஐக்கியமாகி விடத்தான் முயற்சிப்பீர்கள்" என்றாள்.

அதைக் கேட்டு, பாரதத்தினிடம் அப்படி என்ன பெருமை இருக்கப் போகிறது என்று எண்ணிய நான் "பாரதத்தைப் பற்றி இப்படிப் பிரமாதமாகப் பெருமை அடித்துக் கொள்கிறீர்களே! அந்த நாட்டின் மண்ணில் அப்படி என்ன விசேஷ சக்தி நிறைந்திருக்கிறது? இங்கே இருக்கும் ஆண்-பெண்களைப் போலத்தானே அங்கே உள்ள ஆண்-பெண்களும் இருக்கிறார்கள்? அவர்களுக்கு

என்ன தனியாகக் கொம்பா முளைத்திருக்கிறது? நான் எத்தனையோ புகைப்படங்களில் அந்த நாட்டவர்களைப் பார்த்திருக்கிறேன். அவர்களைவிட இந்த நாட்டு ஆண் - பெண்கள்தான் அழகாக ஆடை அணிந்து கொள்கிறார்கள். நாகரிகமாகப் பழகுகிறார்கள். இவர்களிடம் இருக்கும் கவர்ச்சி அவர்களிடத்தில் இல்லை'' என்றேன்.

என் சொற்களைக் கேட்டதும் தேவகியின் முகம் ரத்தச் சிவப்பாகச் சிவந்தது. அவள் உள்ளத்திலே பொங்கிக் கொண்டிருந்த உணர்ச்சிப் பெருக்கை எடுத்துக் காட்டுவதற்காகவே அவள் முகம் அப்படி சிவந்திருக்கிறதோ என்று தோன்றியது. சிறிது நேரம் பேசாமல் இருந்த அவள், அழுத்தந் திருத்தமான குரலில், ''ஆம், ஆடை அலங்காரத்திலேயே அத்தனை பொழுதையும் போக்கிவிடும் மேல் நாட்டு மாதர்களைத் தானே நீங்கள் பார்த்திருக்கிறீர்கள்? அதனால்தான் இப்படிப் பேசிவிட்டீர்கள்! ஆடை அலங்காரத்திலும் சிகை சிங்காரத்திலும் பொழுதைப் போக்கும் நவநாகரிக நங்கையர்கள் நாளைக்கு நாற்பத்தெட்டு மணியாக இருக்கக் கூடாதா என்றுதான் இந்த நாட்டில் எண்ணிக் கொள்கிறார்கள். இந்த நாட்டிலே பாட்டிக்கும் குமரிக்கும் பூசிக் கொள்ளப் பவுடர் வேண்டும். சிங்காரித்துக் கொள்வதையே வாழ்க்கையின் குறிக் கோளாகக் கொண்ட இந்த நாட்டு நாரிமணிகளுக்கு வேறு விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கப் பொழுது இருந்தால் தானே? ஆனால் பாரதப் பெண்மணிகள் என்று சொன்னாலே பிரேமை, அன்பு என்று பொருள் சொல்லி விடலாம். அதாவது பிரேமை என்னும் சொல்லுக்கு நேரான பொருள் தரும் இன்னொரு சொல் என்ன என்று கேட்டால், அது பாரதப் பெண்மணி தான் என்று சொன்னால் கூட மிகையாகாது. அவள் தன் கணவனைத் தெய்வமாகப் பூஜிக்கிறாள். தெய்வம் வேறு, கணவன் வேறு என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் இடம் பெறுவதே இல்லை. அவள் அவனுக்காகத் தன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் அர்ப்பணம் செய்யச் சித்தமாயிருக்கிறாள். அவனுக்காக எந்த ஆபத்தையும் தானே வலியச் சென்று ஏற்றுக் கொள்ளவும் அவள் அஞ்சுவதில்லை.



''உலகத்தில் உள்ள விவாகமான பெண்கள் அத்தனை பேருக்கும் சுதந்திரம் அளித்து, நீங்கள் உங்களுக்குப் பிடித்த, உகந்த, தகுந்த புருஷனை மறுபடியும் உங்கள் இஷ்டப்படி தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னால் பாரதப் பெண்மணி ஒருத்தியே தான் தன் முந்தியக் கணவனையே மறுபடியும் முழுமனத்துடன் கணவனாகத் தேர்ந்தெடுத்துக் கொள்வாள். அவனையன்றி வேறு யாரையும் நெஞ்சால் கூட நினைக்க மாட்டாள். இது என் நிச்சயமான, திட்டமான அபிப்பிராயம். 'கல் என்றாலும் கணவன், புல் என்றாலும் புருஷன்' என்ற பண்பு பாரத நாட்டு ஒன்றுக்குத்தான் உண்டு. ஏனெனில் அங்கே நாங்கள் கணவன் மனைவியின் தொடர்பை இந்த மண்ணுலகத்துத் தொடர்பாக எண்ணுவதில்லை. சாவுக்குப் பிறகும் சாகாத ஆத்மிகத் தொடர்பாகவே கருதுகிறோம். இந்த ஒரே காரணத்தினால்தான் எங்கள் நாட்டிலே, ஆயிரக்கணக்கான, லட்சக் கணக்கான வருஷத்து வீழ்ச்சிக்கும் அடிமைத்தனத்துக்கும் இலக்காகிய பின்பும் கூட, சீதை, சாவித்திரி போன்ற கற்புக்கரசிகளின்

எண்ணற்ற உதாரணங்கள் இன்றும் காணக் கிடைக்கின்றன. பிரேமையும் பரிசுத்தமும், தியாகமும் தவமும், கற்பும் கண்ணியமும், நன்னடத்தையும் நல்லெண்ணமும் நல்ல வளமுற்று விளங்குகின்றன. எங்கள் தலை இந்தப் பெருமிதத்தினால் வானுயர எழும்பி நிற்கிறது. எங்களிடமும் ஒன்று இருக்கிறது. அது கிடைத்தற்கரிய மதிப்பிட முடியாத மாணிக்கம். எங்களிடமிருக்கும் அந்தப் பொருளுக்கு ஈடான பொருள் இந்த



உலகத்தில் உள்ள வேறு எந்த நாட்டிலுமே கிடையாது என்ற பெருமை உணர்ச்சி எங்களை வானவிற்கே இட்டுச் சென்று மிதக்க விட்டுவிடுகிறது. அத்தகைய அரிய பொக்கிஷம் இந்தியர்களாகிய எங்களிடம் இருக்கிறதாக்கும்!'' என்றான். அப்பொழுது அவன் முகத்தில் தோன்றிய பெருமை உணர்ச்சியைச் சொல்லி முடியாது. இது போன்ற அவனுடைய பேச்சுக்களைக் கேட்டுக் கேட்டு என் உள்ளத்திலும் தாய் நாட்டுப் பற்றுத் தலை தூக்கியது. தேவகியிடம் கண்ட அதே பெருமை உணர்ச்சி என் இருதயத்தின் ஆழத்திலும் இடம் பெற்றது. 'உண்மையிலேயே இந்தியா இவ்வளவு உயர்ந்த நாடாக இருக்குமா?' என்று மனத்துள் எண்ணுவேன். உடனே என் மனத்தில் சஞ்சலம் எழும். 'நமக்கும் இறக்கை இருந்தால் இதே க்ஷணம் இந்தியாவுக்குப் பறந்து சென்று, தேவகி சொன்னதெல்லாம் உண்மைதானா, இல்லையா?' என்று பார்த்து வந்து விடலாம் அல்லவா என்ற ஆசை என் உள்ளத்துக்கு இறக்கை கட்டிப் பறக்க விட்டு விடும். ஆனால் என் உடலுக்குப் பறப்பதற்கு இறக்கை ஏது? அது சிறகு ஒடிந்த பட்சிபோல இருந்த இடத்தில் இருந்த வண்ணமே பாரதத்தைப் பார்க்கத் துடிக்கும்.

## 9. என்றைக்கு வருமோ?

சகோதரா! இந்தச் சம்பவம் நடந்து இரண்டு வாரங்களுக்கு மேல் ஓடி விட்டன. இந்தியாவின் பெருமையைக் கேட்டதிலிருந்து என் மனம் எதிலுமே நாட்டம் கொள்ளுவதில்லை. நான் எப்பொழுதும் வாட்டமாக, வருத்தமே உருவாக இருக்கலானேன். முன்போல் லிவர்பூலின் கடைத் தெருக்களில் சென்று சுற்றவோ, கடற்கரைக்குச் சென்று உலாவி வரவோ, எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. இருதயத்தின் ஆழத்திலே இந்தியாவைக் காண வேண்டும் என்ற ஆசை எழுந்து விட்டது. பொன்னைக் கண்ட பின் மனிதனுடைய மனத்திலிருந்து பித்தளையின் மோகம் தணிவது இயல்புதானே? அதேபோலப் பாரதத்தின் பெருமையைக் கேட்டபின் உள்ளத்திலே குடியிருந்த ஆங்கிலேய மோகம் அடங்கி விட்டது. அது மட்டும் அல்ல; அதனிடம் எனக்கு அளாதி வெறுப்பே ஏற்பட்டு விட்டது. ஆகவே, நான் நாள் முழுவதும் அறையே கதி என்று என் அறையிலேயே அடைந்து கிடக்கலானேன். ஆனால் மாலை வேளைகளில் தேவகியும் ரூப் சந்தும் வந்து விட்டால் என் மன வாட்டம் எல்லாம் மாயமாய் மறைந்து விடும். நான் மகிழ்ச்சியில் மிதந்து மனக் கஷ்டங்களை மறந்து விடுவேன். அவர்களைக் கண்ட மாத்திரத்தில் என் உள்ளத் திரையிலே பிறந்த நாட்டின் பெருமை எழில்மிகுந்த சித்திரமாக உருவாகி, மனக் கண்களெதிரே காட்சி அளிக்கத் தொடங்கி விடும். நான் அதைக் கண்டு களிப்புறத் தொடங்குவேன்.



மனைவி :— நீங்கள் எனக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கித் தருவதாக ரொம்ப நாட்களாக ஏமாற்றிக் கொண்டு வருகிறீர்கள் !

கணவன் :— ஏமாற்றவில்லையே ! புடவை வாங்கப் பணம் தயாராக வைத்திருக்கிறேன். ஆனால் புடவை வாங்கினதும் உன்னை உன் சிநேகிதிகளின் வீட்டுக்கும் உறவினர்கள் வீட்டுக்கும் அழைத்துப் போகப் பணம் வேண்டுமே ! அதற்குத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்!

இப்படியிருக்கும் பொழுதுதான் ஒருநாள் ஸ்மலாவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில் எழுதியிருந்தது வருமாறு :

என் அன்புள்ள ஹாரிஸன் !

அன்று நீ என்னிடம் நடந்து கொண்ட விதம் என் மனத்தை ஆட்கொண்டு விட்டது. நீ அன்று எனக்குச் செய்த அந்த உபகாரத்துக்கு, உனக்கு எப்படி நன்றி செலுத்துவது என்றே எனக்கு விளங்கவில்லை. ஏனெனில் அந்த உபகாரத்துக்கு நன்றி செலுத்தும் சக்தி பேசும் பேச்சுக்கோ, எழுதும் சொற்களுக்கோ ஏது? இந்திய மக்கள் தெய்வ குணம் பொருந்தியவர்கள் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இதுவரை எனக்கு இவ்விஷயத்தில் நம்பிக்கை ஏற்பட்டதே இல்லை. இவை யெல்லாம் வெறும் வாய்ச் சொல்லாக இருக்கும், கட்டுக்கதையாக இருக்கும் என்றேதான் இதுவரை நான் எண்ணி வந்தேன். ஆனால் நீ என் அந்த எண்ணத்தை அறவே மாற்றிப் பாரத மக்களின் பெருமையை என் உள்ளத்தில் நிலை நாட்டி விட்டாய்.

உண்மையைக் கேட்டால், இன்றுவரை உன் அன்பும் காதலும் அவ்வளவாக என் உள்ளத்தில் இடம் பெறவில்லை. எத்தனையோ பேரைப்போல உன்னையும் ஒருவனாகத்தான் எண்ணி வந்தேன். ஆனால் இனி உன்னைத் தவிர வேறு யாருக்கும் என் உள்ளத்தில் இடம் கிடையாது. இது வெறும் வாய்ப் பேச்சு அல்ல; முக்காலும் உண்மையான வார்த்தை. நாம் இருவரும் கணவன் மனைவியாகப் பாரத நாட்டுக்குப் புறப்படும் நன்னாள் என்றைக்கு வருமோ என்று ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறேன். பாரத பூமிக்குச் சென்று அதன் நெடிய வயல்களையும், இருமருங்கும் கரைபுரண்டு ஓடும் இனிய நதிகளையும், வானுயர நின்று வானவரோடு உரையாடும் மலைகளையும், இயற்கை அன்னை இன்பமுடன் அளித்திருக்கும் எழில் மிக்க பசுமை நிறைந்த காட்சிகளையும் கண்ணாரக் கண்டு ஆனந்திக்க வேண்டும் என்று எனக்குக் கொள்ளை ஆசையாக இருக்கிறது. அதற்கான ஏற்பாட்டை நாம் சீக்கிரம் செய்ய வேண்டாமா?

என் உடல் நிலை இப்பொழுது எவ்வளவோ குணமாகிவிட்டது. தாய் தந்தையர் இறந்த துயரமும் சிறிது சிறிதாகக் குறைந்து வருகிறது. நாம் இருவரும் சேர்ந்து தியேட்டருக்குப் போய் எத்தனையோ நாட்களாகின்றனவே, என்றைக்காவது ஒரு நாள் போய் வரலாமா?

இப்படிக்கு,
உன் அன்புள்ள
ஸ்மலா.

கடிதத்தைப் படித்து முடித்ததும் இவ்வளவு நாட்கள் என்னை விட்டு அகன்றிருந்த அதே பழைய நோய் மீண்டும் பற்றிக் கொண்டு விட்டது. குடிகாரன் குடி கெடுக்கும் கடையைக் கண்டதும், தான் செய்த பிரதிக்ஞைகளை மறந்து கடைக்குள்ளே நுழைந்து விடுகிறான் அல்லவா? அதேபோல, நான் ஸ்மலாவைப் பற்றிக் கொண்டிருந்த அபிப்பிராயங்களை யெல்லாம் அந்த க்ஷணமே என் உள்ளத்திலிருந்து அகற்றி விட்டேன். அடுத்த நிமிஷம் ஸ்மலாவின் ஆசை தவழும் அந்த இன்ப முகம் என் கண்களிலே புகுந்து பழைய இன்ப நினைவுகளுக்கு என்னை மறுபடியும் இழுத்துச் சென்றது.

'ஸ்மலா அன்று செக்கில் உள்ள எட்டை என்பதாக மாற்றி இப்படி மோசம் செய்தாளே, எதற்காகச் செய்திருப்பாள்?' என்று நான் இவ்வளவு நாட்களும் யோசித்து யோசித்துப் பார்த்திருக்கிறேன். ஆனால் இதுவரை அதன் ரகசியம் எனக்குச் சரியாகப் புலனாகவில்லை. இன்று அவளிடமிருந்து வந்த கடிதத்தின் கடைசி வரிகள் என் அந்த யோசனைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து ரகசியத்தை வெளியிட்டு விட்டன. ஸ்மலாவின் தாய் தந்தையர் அவளைத் தனியாகத் தவிக்க விட்டு விட்டு இறந்து விட்டனர் என்பதும், இப்பொழுது அவள் இந்த உலகத்தில் அநாதையாக, ஆதரவற்றவளாக, தன்னந்தனியளாக ஆகிவிட்டாள் என்பதும், அவளைக் கவனிக்க யாருமே நாதியில்லை என்பதும், போதாக் குறைக்குப் பலமாதங்களாக அவள் நோயுற்றிருக்கிறாள் என்பதும் அவளுடைய அந்தக் கடிதத்தின் கடைசி வரிகளிலிருந்து தெள்ளத் தெளிய விளங்கிவிட்டன.

அன்று அவள் ஹோட்டல் வாசலில் என் உதவியை நாடி வந்த பொழுது, அவள் உடம்பு துரும்பாக இளைத்து எப்படி உருமாறிப் போயிருந்தது! கண்கள் குழிவிழுந்து பள்ளத்தில் போயிருந்தன! ஜீவனற்ற நடைப்பிணம் போல் அல்லவா அன்று அவள் காட்சி அளித்தாள்! அதை நினைத்துப் பார்க்கவே, என் உள்ளத்தை என்னவோ செய்தது. 'அந்தமாதிரிச் சந்தர்ப்பத்தில் அவள் செய்த குற்றம் குற்றமே ஆகாது. சிரமதசையில் சிக்குண்ட ஒருத்தி ஏமாற்றாமல்

என்ன செய்வாள்?' என்று எண்ணி மனத்தைச் சமாதானபபடுத்திக் கொள்ள முயன்றேன். ஆயினும் அவள் என்னிடம் விவரமாகச் சொல்லி யிருந்தால், விஷயம் இவ்வளவு தூரம் முற்றியிராதல்லவா? ஆனால் தன் சிரமத்தைச் சொல்லிக் கொள்ளச் சிலருக்கு மனம் வராதுதான் என்று தோன்றவே, அவளிடம் நான் கொண்டிருந்த கெட்ட அபிப்பிராயங்கள் எல்லாம் அறவே அழிந்து விட்டன. 'சென்ற நாட்கள் திரும்பி வருவதில்லை. வாயிலிருந்து வெளியான வார்த்தைகள் திரும்பி வந்ததில்லை. கையிலிருந்து கிளம்பிய அம்பு திரும்பி வந்து பார்த்ததில்லை' என்றெல்லாம் சொல்லுவார்கள் அல்லவா? அது என் விஷயத்தில் பொய்த்து விட்டது. எல்லோரும் சொல்வதற்கு நேர் மாறாக என் சென்ற காலம் திரும்பி விட்டது; பழைய இன்பங்கள் திரும்பி விட்டன. அப்புறம் கேட்பானேன்? பணம் பணமாகச் செலவழிய வில்லை; தண்ணீராகச் செலவழியலாயிற்று. ஸ்டெலா அதே பழைய ஸ்டெலா ஆனாள்; நானும் அதே பழைய நானாக ஆனேன். அதே பழைய கண்கள்! அதே பழைய கடைக் கண் பார்வை! எல்லாமே எங்களிடம் திரும்பி வந்து விட்டன. நாங்கள் இந்த உலகத்து விஷயங்களை மறந்து ஆனந்தக் கடலில் இன்பமாக மிதக்கலானோம்.

ஒரு நாள் நான் ஸ்டெலாவைப் பார்த்து, 'ஸ்டெலா! வர வரப் பணம் செலவழிந்து கொண்டே போகிறதே! என்ன செய்வது?'' என்று கேட்டேன்.

ஸ்டெலா என் கோட்டுப் பித்தானைத் தன் கைகளால் சுழற்றியவாறே, ''இன்னும் எத்தனை பணம் பாங்கியில் பாக்கி யிருக்கிறது? கொஞ்சம் பாங்குப் புஸ்தகத்தை எடு. பார்ப்போம்!'' என்றாள்.

நான் பாங்குப் பாஸ் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்து விட்டு, ''இன்னும் நூற்றிருபத்தைந்து பவுன்தான் பாக்கி!'' என்றேன்.

''நூற்றிருபத்தைந்து பவுன் பாக்கி யிருக்கிறதல்லவா? கவலைப்படாதே! என் சித்தப்பா சாகும் தறுவாயில் இருக்கிறார். சில நாட்களாக அவருக்கு உடம்பு ரொம்ப அதிகமாயிருக்கிறதாம். அவர் இன்னும் சில நாட்களில் இறந்து விடலாம். அவருக்குச் சொத்து லட்சத்துக்கு மேல் இருக்கிறது. அவருடைய சொத்து முழுவதும் எனக்குத்தான் கிடைக்க வேண்டும்! அவருக்கு என்னைத் தவிர வேறு யாரும் வாரிசு கிடையாது!'' என்றாள்.

அதைக் கேட்டதும் அவநம்பிக்கைக்கு இடையே நம்பிக்கை ஒளி வீசியது. நான் நாற்காலியை முன்னுக்கு இழுத்துப் போட்டுக் கொண்டேன். பிறகு ஆவல் தவழும் கண்களுடன் அவளையே பார்த்தவாறு, ''உனக்கு உன் பிரதிக்ஞை நினைவிருக்கிறதல்லவா?'' என்று கேட்டேன்

''எந்தப் பிரதிக்ஞை?'' என்று அன்பு தவழ என்னைப் பார்த்துக் கேட்டாள் அவள்.



நண்பர்:—உங்கள் பையன் விடுகிற குத்து ஒவ்வொன்றும் வலிக்கிறதே! பெரிய போக்கிரியாக இருப்பான் போலிருக்கிறதே?

பை. தகப்பனார்: — போக்கிரிதான் ஸார், அவன்! அத்துடன் மகா தைரியசாலி. அவன் அம்மாவையே சில சமயங்களிலே எதிர்க்கிறான் என்றால் பாருங்களேன்!

''நானும் நீயும் கணவன் மனைவியாக...''

''ஓ! நன்றாக நினைவிருக்கிறது. நான் சொன்னது சொன்னதுதான். நீ வேண்டுமானால் உன் மனத்தில் தாராளமாக முடிச்சுப் போட்டு வைத்துக் கொள்ளலாம்!'' என்று பதில் அளித்தாள் ஸ்டெலா.

''பணம் வந்ததும் மனம் மாறி விட மாட்டாயே?''

''நான் ஒன்றும் அவ்வளவு மோசமானவள் இல்லை, தெரியுமா?''

''அதற்குச் சொல்ல வில்லை. பணம் பொல்லாத பொருள். நல்ல நல்ல மனிதர்களின் மனத்தை யெல்லாம் கூட மாற்றி விடக் கூடிய மாயசக்தி அதற்கு உண்டு. அதனால்தான்......''

''ஆனால் உன் அன்பு பணத்தைக் காட்டிலும் பன் மடங்கு மேலானது. உன் அன்புக்கு எதிரே உலகத்தில் கிடைத்தற் கரிய பொருள்கள் எல்லாம் கூடத் துச்சமானவை, மகா மட்டமானவை'' என்றாள் ஸ்டெலா.

நாங்கள் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் பொழுதே, ஒரு பையன் 'லிவர்பூல் டைம்ஸ்' பத்திரிகையின் அப்பொழுதுதான் வெளியான புதிய இதழை எங்கள் மேஜையின்மேல் கொண்டு வந்து வைத்து விட்டுச் சென்றான். நான் அதைக் கையில் எடுத்த வண்ணமே, ''அந்தக் கிழவன் எப்பொழுது சாவான்?'' என்று கேட்டேன்.

''அவருக்கு உடம்பு ரொம்ப ரொம்ப அதிகமாயிருக்கிறது. இன்றைக்கோ நாளைக்கோ

என்றுதான் இழுத்துப் பறித்துக் கொண்டிருக்கிறார். இந்தக் கணமே செத்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நான் எந்தக் கணமும் சாவு ஓலையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!'' என்றாள் ஸ்டெலா.

'' அப்படியா?'' என்று கேட்டவாறே நான் பத்திரிகையின் முதற் பக்கத்தில் என் பார்வையைச் செலுத்தினேன். என் கண்களை என்னாலேயே நம்ப முடியவில்லை. கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தேன். எனக்கு உண்டான மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையில்லை. அந்த மகிழ்ச்சியில் 'ஹ்ரே' என்று உரக்கக் கூச்சலிட்டுக் கொண்டு நான் தரையிலிருந்து ஒரேயடியாக உயர எழும்பி ஒரு குதி குதித்தேன். எனக்கு அப்பொழுது என் இருதயமே தொண்டைக்கு வந்து விட்டது போன்ற உணர்ச்சி உண்டாயிற்று.

என்னைப் பொறுத்தவரை அது சாதாரணமான, அற்ப சொற்பமான செய்தி அல்லவே! எனக்கு என்னுடைய அதிர்ஷ்டக் கதவு திடுதிப்பென்று திறந்து கொண்டு விட்டதாகவே தோன்றியது.

பத்திரிகையில் கொட்டை கொட்டையான எழுத்துக்களில் பிரசுரமாகியிருந்த அந்தத் திடுக்கிடும் செய்தி இதுதான் :—

**மிஸ்டர் கிராஸ்வுட் மரணம் அடைந்தார்**

கண்மூடும் பொழுது அவர் கடைசியாகச் சொன்ன சொற்கள்

**என் சொத்து முழுவதும் என் ஸ்டெலாவுக்கே**

பத்திரிகை அச்சுக்குப் போய்க்கொண்டிருந்த பொழுது, 'லிவர்பூலிலேயே மிகப் பிரசித்தி வாய்ந்த கடையான பிரின்ஸ் ஷாப்பின் சொந்தக்காரரான மிஸ்டர் கிராஸ்வுட் மரணம் அடைந்தார்' என்னும் வருத்தம் தரும் செய்தி நமக்குக் கிடைத்தது. அவர் சிறிது காலமாகவே நோய்வாய்ப்பட்டிருந்தார். ஆனால் இவ்வளவு சீக்கிரம் இறந்து விடுவார் என்று யாருமே எண்ணவில்லை. அவர் தம் சொத்து முழுவதையும் தம் தமையன் மகள் ஸ்டெலாவின் பெயருக்கு எழுதி வைத்திருக்கிறார். ஸ்டெலா தாய் தந்தையற்ற அநாதை. தற்சமயம் அவள் மிகுந்த சிரமதசையில் இருக்கிறாள். கண்மூடும் கடைசி நேரத்திலும் கூட மிஸ்டர் கிராஸ்வுட்டின் வாய் ஸ்டெலாவின் பெயரை முணுமுணுத்தது.

இதைப் படித்த பிறகு நான் பத்திரிகையை ஸ்டெலாவின் கையில் கொடுத்து விட்டேன். அச்சமயம், நான் அந்தச் சொத்து முழுவதும் எனக்கே கிடைத்து விட்டது போன்ற மகிழ்ச்சியில் மூழ்கினேன். எனக்குக் கிடைத்தால் என்ன, என் ஸ்டெலாவுக்குக் கிடைத்தால் என்ன என்ற எண்ணம் என் நெஞ்சில் அலை பாய்ந்து கொண்டிருந்தது. அதைப் படித்ததும் ஸ்டெலாவின் கண்களும் மகிழ்ச்சியால் மலர்ந்தன; முகத்தில் முறுவல் நெளிந்தது. அடுத்த கணம் அவள் எழுந்து நின்றாள். சுபாவமாகவே அவளுடைய ஆகிருதி உயரமானது. தன் உயரமான ஆகிருதியை இன்னும் உயரமாக்கி நிமிர்ந்து நின்று கொண்டு அவள், '' நான் நினைத்தது சரியாகி விட்டது. இனி நாம் ஏழைகள் அல்ல!'' என்றாள்.

இதைச் சொல்லிய வண்ணம், அவள் அன்பு பொங்கும் விழிகளுடன் ஒரு முறை என்னைப் பார்த்தாள். பிறகு தன் தொப்பியைத் தலையில் வைத்துக் கொண்டு வெளியே புறப்பட்டாள். ஆர்வமும் ஆனந்தமும் அவள் கால்களுக்கு இறக்கை கட்டி விட்டன. அவள் வெகு வேகமாக வெளியே போய்க் கொண்டிருப்பதைக் கண்டவாறே நான் சாய்வு நாற்காலியில் சாய்ந்தேன். (தொடரும்)

# பலே, கைகாரன்!

ராமு அழுதுகொண்டே வீட்டுக்கு ஓடி வந்தான். ராமுவின் அழுகையைக் கண்டதும் அவன் தகப்பனார் பதறிப் போய் ஓடிவந்து, '' என்னடா! எங்கேயாவது கீழே விழுந்து விட்டாயா? ஏன் விசித்து விசித்து அழுகிறாய்?'' என்று கேட்டார்.

'' நான் கீழே விழவில்லை, அப்பா! அடுத்த வீட்டுப் பாலு என் முதுகில் ஓங்கி அடித்துவிட்டான்'' என்றான் ராமு.

அவன் தகப்பனார் கோபத்துடன், '' ஆமாம்! அடுத்த வீட்டுப் பாலு அடித்தான் என்று அழுகிறாயே? அவன் அடிக்கும்போது நீ கையைக் கட்டிக்கொண்டா நின்றாய்?'' என்று கேட்டார்.

'' இல்லை, அப்பா! அவன் ஓங்கி அடித்துவிட்டு ஓடிவிட்டான்.''

''சரி, அழாதே! இனிமேல் அவன் அடித்தால் திருப்பி அடித்துவிடு. கோழையாயிருக்காதே!'' என்று கூறி அவன் தகப்பனார் அவனைச் சமாதானப் படுத்தினார்.

அரை மணி நேரம் கழிந்தது. ராமு சிரித்துக் கொம்மாளமடித்துக் கொண்டே ஓடி வந்தான். அதைக் கண்ட அவன் தகப்பனார், '' என்னடா சந்தோஷம், தலைகால் புரியாமல்!'' என்று கேட்டார்.

'' அப்பா, அப்பா! அடுத்த வீட்டு ராமு இப்பொழுது அழுது கொண்டிருக்கிறான்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான் ராமு.

'' என்னடா! உன்னை அவன் மறுபடியும் அடித்தபொழுது திருப்பித் தாக்கி விட்டாயா, என்ன? பேஷ்! இனிமேல் பயங்கொள்ளியாயிருக்கக் கூடாது, தெரிந்ததா?'' என்று கூறித் தட்டிக் கொடுத்தார் அவன் தகப்பனார்.

'' அப்பா! என்னை அவன் மறுபடியும் அடிக்கவில்லை. ஆனால் அவன் அடித்ததாக நினைத்துக் கொண்டு அவன் முதுகில் நான் வெளுத்து வாங்கி விட்டேன், தெரிந்ததா?'' என்றான் ராமு. — பி. எஸ்.

# பத்து - வருஷ

# ட்ரெஷரி ஸேவிங்ஸ் டிபாஸிட்

# ஸர்ட்டிபிகேட்

**(3½% வரி விலக்குள்ள வருமானம்)**

*கீழ்க்காணும் பார்ட் "ஏ" ஸ்டேட்டுகளில் உள்ள எல்லா ஸப்-ட்ரெஷரிகளிலும் இப்போது கிடைக்கும்*

| | |
|---|---|
| அஸ்ஸாம் | சென்னை |
| பிஹார் | ஒரிஸ்ஸா |
| பம்பாய் | பஞ்சாப் |
| மத்திய பிரதேசம் | உத்தரப் பிரதேசம் |

மேற்கு வங்காளம்

## டிபாஸிட்டு அங்கீகரிக்கப்படும் ஆபீஸ்களின் முழு ஜாபிதா வருமாறு :—

(i) *கல்கத்தா, பம்பாய், சென்னை, டில்லி ஆகிய நகரங்களில் உள்ள ரிஸர்வ் பாங்கி ஆபீஸ்களும், மற்றும் இந்தியாவில் மற்ற இடங்களில் கவர்ன்மெண்ட் ட்ரெஷரி தொழில் பட்டுவாடா செய்யும் இம்பீரியல் பாங்கி ஆப் இந்தியாவின் பிராஞ்சுகளும்*

(ii) *பார்ட் "ஏ" ஸ்டேட்டுகளின் இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியா ட்ரெஷரி தொழில் பட்டுவாடா செய்யாத இடங்களில் உள்ள எல்லா ஜில்லா ட்ரெஷரிகளும்.*

(iii) *பார்ட் "ஏ" ஸ்டேட்டுகளில் உள்ள எல்லா ஸப்-ட்ரெஷரிகளும்.*

(iv) *பூஜ் (கட்ச்), இம்பால் (மணிப்பூர்), கூர்க்-மெர்க்காரா (குடகு) ஆகிய இடங்களிலுள்ள ட்ரெஷரிகள்.*

**ஸர்ட்டிபிகேட்டுகள் நூற்றுக்கணக்கில் வெளியிடப்படும்**

| | | |
|---|---|---|
| தனி நபர்கள் முதலீடு செய்யக் கூடிய தொகையின் அதிக பக்ஷம் | ரூ. | 25,000 |
| கூட்டாக இரண்டு பேர் ... ... ... | ரூ. | 50,000 |
| ஸ்தாபனங்கள் ... ... ... ... | ரூ. | 50,000 |
| தர்ம ஸ்தாபனங்கள் ... ... ... | ரூ. | 1,00,000 |

*இந்த முதலீடு சம்பந்தமான மற்ற விவரங்கள் அல்லது விதிகளுக்கு,* **நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர், கார்ட்டன் காஸில், ஸிம்லா-3,** *என்கிற விலாசத்துக்கு எழுதுக.*

AC-377 TM.



# விசித்திரத் தண்டனை

உருதுக் கதை: ரஸியா ஸஜ்ஜத் ஷஹீர்
மொழிபெயர்ப்பு: வோஞ்சி

தேவனின் மனம் சென்ற சில நாட்களாக ஒரே குழப்பமாய் இருந்தது. "இது சரியல்ல. இது நியாயமல்ல. இவ்விதம் மனோபலத்தைக் கை விட்டு விடக்கூடாது" என்றெல்லாம் அவன் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்தான்.

ஆனால் அதே சமயத்தில் அந்தப் பெண்ணின் வசீகரமான முகம் அவனுடைய இருதயத்தை என்னவோ செய்தது; அது அவனுடைய உறுதியை உருக்குலைத்து விடும் போல் தோன்றியது.

"புவனா பார்க்கும் பார்வை தேவ லோகத்திலிருந்து வந்துள்ள என்னைக் கூட மயக்குகிறதே! அவள் கண்களில்தான் என்ன கவர்ச்சி! அவள் என் மீது கொண்டுள்ள காதலை அவளுடைய நடை, உடை, பாவனை, பார்வை எல்லாம் எவ்விதச் சந்தேகத்துக்கும் இடமின்றிப் பறை சாற்றுகின்றன. அப்படியிருக்கப் புவனாவை நான் ஏற்க மறுத்தால் அவள் என்ன பாடு படுவாள்! நான் மறுத்து விட்டதற்காக அவள் உயிரை மாய்த்துக் கொண்டு விட்டால், அந்தப் பாவம் என்னை அல்லவா சேரும்! இந்தத் தர்ம சங்கடத்திலிருந்து விடுதலை அடைவதற்கு வழி என்ன!"

இவ்விதம் பல்வேறு எண்ணங்களால் அலைக்கழிக்கப் பட்டுக் கொண்டிருந்த அவனுடைய மனக் கண் முன்னிலையில் முப்பது வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த ஒரு காட்சி நிழலென்று தோன்றியது.

அப்போது அவன் தெய்வ லோகத்தில் தேவர்களில் ஒருவனாக இருந்தான். அங்கு எப்போதும் போல் அமிர்தமும் பாலும் தேனும் வழிந்தோடிக் கொண்டிருந்தன!

அந்த உலகில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மலைகள், அலைகள், கடல்கள், காற்று எதுவுமே இல்லை. எங்கும் சாந்தி நிலவியது.

அங்கு விருப்பு வெறுப்பு இல்லை; சுகமில்லை, துக்கமில்லை; சிருஷ்டியுமில்லை, அழிவுமில்லை; இயற்கைக் காட்சிகளும் இல்லை, செயற்கைக் காட்சிகளும் இல்லை; இருள், பஞ்சம், பசி, பிணி எதுவுமே இல்லை.

அந்தக் காட்சியை நினைத்துப் பார்த்த போது தேவனுக்குச் சிரிப்புக்கூட வந்து விட்டது. சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மலை, கடல் போன்ற அற்புதக் காட்சிகள் இராத உலகம் ஓர் உலகமா என்று தோன்றியது அவனுக்கு!

தேவ உலகில் ஆடவர்களும் பெண்களும் இருக்கத்தான் செய்தார்கள். எனினும் அவர்களுக்குச் சிற்றின்பம் என்றால் என்ன என்பதே தெரியாது!

அவன் அப்போது கடவுளிடம் ஒரு விண்ணப்பம் செய்து கொண்டதை நினைத்துக் கொண்டான். சிறிது காலம் பூலோகத்தில் வாழ்வதற்குத் தான் விரும்புவதாக அவன் கடவுளை வேண்டிக் கொண்டான். தேவ லோகத்தில் எவ்விதக் கஷ்டமும் இல்லை யென்றாலும், பூலோகத்தின் அதிசயங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவனை ஆட் கொண்டது.

அவனது கோரிக்கை மடத்தனமானது என்று அவனுடைய சகாக்களான தேவர்கள் கூறினர்.

"எல்லோரும் பூலோகத்திலிருந்து சொர்க்க லோகத்துக்கு வர ஆசைப்படுகிறார்கள். சொர்க்க லோக சுகத்தைப் பற்றி மானிடர்கள் சதா சர்வ காலமும் புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க இவன் சொர்க்க லோகத்திலிருந்து துன்பத்துக்கு உறைவிடமான பூலோகத்துக்குச் செல்ல ஆசைப்படுகிறானே!" என்று தேவர்கள் அவனைப் பரிகாசம் செய்தனர். அவனது கோரிக்கைக்குக் கடவுள் நிச்சயமாக இணங்க மாட்டார் என்றும் அவர்கள் கூறினர்.

ஆனால் ஒரு நாள் அவனைத் தம்முடைய சன்னதிக்கு அழைத்து வரும்படி கடவுள் கருணை கூர்ந்து கட்டளையிட்டார்.

தனது விண்ணப்பத்தைக் குறித்துக் கடவுள் என்ன தீர்ப்பு அளிக்கப் போகிறாரோ என்று



அவன் மார்பு அடித்துக் கொண்டது. கை கால்கள் நடுங்க அவன் கடவுளின் சன்னதியில் போய் நின்றான்.

"உன் ஆசை நிறைவேறட்டும்" என்று அனுக்கிரகம் செய்தார் கடவுள்.

அவ்வளவுதான்! தேவனுக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. அவனுக்கு அப்போது, தான் பூலோகத்தில் இருப்பதாகவே தோன்றியது!

தன்னுடைய வேண்டுகோளுக்குச் செவி சாய்த்ததற்காக அவன் கடவுளுக்குச் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தான்.

"ஆனால், ஒரு நிபந்தனை" என்று ஆரம்பித்தார் கடவுள்.

தேவன் அந்த நிபந்தனையைத் தெரிந்து கொள்வதற்காகக் கைகூப்பி வணக்கத்துடன் நின்றான்.

கடவுள் கூறலானார்:—

"பூலோகத்தை இயக்கும் சக்தி உருவமான பெண்ணைக் கண்டு நீ மயங்கி விடக் கூடாது. பேரின்பத்தை அடைய விரும்புவோர் என்னை நாடுவது போல, சிற்றின்பத்தை அடைய விரும்புவோர் தான் பெண்ணை நாடுவார்கள். நீயும் அவளைச் சந்திக்கலாம், பேசலாம். ஆனால் நீ சிற்றின்பத்துக்கு, சரீர சுகத்துக்கு இடம் கொடுத்து விடக் கூடாது. இந்த உலகத்தில் உள்ளவர்கள் ஒளியினால் உருவாக்கப் பட்டவர்கள். ஆனால் பூலோகத்தில் உள்ள மானிடரோவெனில் மண்ணினால் உருவாக்கப் பட்டவர்கள். பேரின்பத்தை, நித்ய சுகத்தை நுகரும் தேவர்கள் கேவலம் மனிதர்களிடம் சரீர சுகத்தை, அநித்ய சுகத்தை இச்சிப்பது இந்த லோகத்தின் கௌரவத்துக்குக் குறைவாகும். நீ மனித உருவாக இருந்தாலும், ஒழுக்கத்தில், ஆசாரத்தில் நீ தேவனாகவே இருக்க வேண்டும், தெரிந்ததா!......சரி, நீ பூலோகத்துக்குச் செல்வாயாக!"

இவ்வாறு கடவுளின் அனுக்கிரகத்தைப் பெற்றதும் அவனுக்கு மானிட உருவம் வந்தது. அவன் அடுத்தகணமே பூலோகத்துக்கு வந்து சேர்ந்தான்.

இவ்வாறாக முப்பது வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த மேற்படி காட்சி அவன் கண் முன் தோன்றி மறைந்தது.

* * *

இந்த முப்பது வருஷ காலத்துக்குள் இந்த உலக அதிசயங்களையும், இன்ப துன்பங்களையும், சுக துக்கங்களையும் அவன் கண்களால் பார்த்தாகி விட்டது.

எனினும் அவனுக்குத் திருப்தி ஏற்படவில்லை. ஏதோ ஒரு பெரும் குறை அவன் ஹிருதயத்தை அழுத்திக் கொண்டிருந்தது. அந்தக் குறை தீர்ந்தாலன்றி அவனது பூலோக வாழ்க்கை பூர்த்தியானதாகச் சொல்ல முடியாது. அந்தக் குறை தீராமல் மறுபடியும் சொர்க்க லோகத்துக்குச் செல்லுவதில் அர்த்தமில்லை. அந்தக் குறை நிவர்த்தியாகுமா? — இந்தக் கேள்விக்குப் பதில் என்ன என்பது இன்னும் சில மணி நேரத்தில் தெரிந்து விடும் என்றது அவன் மனம். உடனே அவன்

தன் கைக் கெடியாரத்தை எடுத்துப் பார்த்தான். சரியாக மணி ஆறு ஆகியிருந்தது. அவள் ஐந்தரை மணிக்கு வருவதாகச் சொன்னாளே!

மறுபடியும் அவன் தன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். தலையை மறுபடியும் வாரிக் கொண்டான்.

அதே சமயம் கதவை யாரோ தட்டும் சத்தம் கேட்டது. அப்போது அவனுக்கு யாரோ தன் ஹிருதயத்தின் கதவைப் பலமாகத் தட்டுவது போல் இருந்தது!

கதவைத் திறந்தான். புவனா பிரமாதமாக அலங்காரம் செய்து கொண்டு சர்வாங்க சுந்தரியாக அவன் எதிரில் காட்சி அளித்தாள்.



"நான் வருவதற்குச் சிறிது நேரம் ஆகி விட்டதற்காக மன்னிக்கவும். சரி, நாம் புறப்படுவோமா!" என்றாள் அவள்.

அவன் "சரி" என்று சொல்லுவதற்கு முன்பே அவளுடைய அங்கவஸ்திரத்தை எடுத்து அவள் அவன் கழுத்தில் மாலையாகப் போட்டாள். அப்போது தேவனுக்கு மெய் சிலிர்த்தது.

இருவரும் உல்லாசமாக ஏரிக்கரைக்குச் சென்றார்கள். வழியில் உள்ள கடை ஒன்றில் புவனா நிறைய பட்சணம் வாங்கிக் கொண்டாள்.

இருவரும் படகில் ஏறிக் கொண்டு ஏரியைப் பிரதட்சிணம் செய்யத் தொடங்கினர்.

அவன் தேவலோகத்தில் இருந்த போது பருகிய அமிர்தத்தைக் காட்டிலும் புவனாவினால் படகில் கொடுக்கப்பட்ட பட்சணம் அவனுக்கு அதிக இனிமையாக இருந்தது!

அன்று பௌர்ணமியானதால் சிறிது நேரத்தில் சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களை அள்ளி வீசிக் கொண்டு தன் பிரயாணத்தை ஆரம்பித்தான்.

எதிரில் எழில் மிக்க ஏரி! பக்கத்தில் மகா ரூபவதியான மங்கை! சுற்றுப்புறமும் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் வெண்ணிலா!

படகு மெதுவாக ஊர்ந்து சென்று கொண்டிருந்தது. தேவனின் மனம் தடுமாறியது.

"நாம் முதன் முதலாகச் சந்தித்தது உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா!" என்று ஒரு கேள்வியைப் போட்டாள் புவனா.

"எப்படி ஞாபகம் இராமல் போகும்! அது என் மனத்தில் பசுமரத்தாணி போல் பதிந்திருக்கிறதே! அச்சம்பவம் நிகழ்ந்து நாலு வருஷங்கள் ஆகி விட்டன. எனினும், அது நேற்றுத்தான் நடந்தது போல் எனக்குத் தோன்றுகிறது" என்று பதில் அளித்தான் தேவன்.

"அன்றிலிருந்து இன்று வரையில் நான் சதா சர்வகாலமும் உங்களையே நினைத்துக் கொண்டிருக்கிறேன். உங்கள் பேச்சில், உங்களுடைய புன்முறுவலில் நான் இன்பத்தைக் காண்கிறேன். என் கண்களுக்கு நீங்கள் ஒரு தேவ புருஷனைப்போல் தோன்றுகிறீர்கள்!" என்றாள் அவள்.

இதைக் கேட்டதும் தேவன் திடுக்கிட்டான். தன்னைப் பற்றிய இரகசியத்தை அவள் தெரிந்து கொண்டு விட்டாளோ என்று சந்தேகம் அவனுக்கு உண்டாயிற்று. ஆனால் அவள் மேற்கொண்டு கூறிய வார்த்தைகளிலிருந்து அவள் தன் இரகசியத்தை அறிந்து கொள்ளவில்லை என்பது தெரிந்தது.

புவனா மேலும் தொடர்ந்து பேசினாள்.

"என்னிடம் இவ்வளவு அன்பு காட்டும் தாங்கள் தங்கள் மனத்தை எனக்குத் திறந்து காட்டுவீர்கள் என்று நான் இவ்வளவு காலமாக எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் பொறுமைப் போட்டியில் நீங்களோ வெற்றி பெற்றிருக்கிறீர்கள். என்னால் இனிமேல் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. நான் தங்களைக் காதலிக்கிறேன். ஹிருதய பூர்வமாகக் காதலிக்கிறேன். நான் உயிருடன் இந்த உலகில் இருக்க வேண்டுமானால் என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும்.... நீங்கள் என்னைக் காதலிக்கிறீர்களா?"

"இவ்விஷயத்தில் உனக்கு இன்னுமா சந்தேகம்! நான் உன்னை முழுமனதுடன் காதலிக்கிறேன்" என்றான் தேவன்.

உடனே அவள் பரவசமடைந்து அவன் தோளின் மேல் சாய்ந்து கொண்டாள்.

"எனக்கு இப்போது நான் சொர்க்க லோகத்தில் இருப்பது போல் தோன்றுகிறது" என்றாள் புவனா.

அதைக்கேட்டதும் தேவனின் உடல் நடுங்கியது.

அவன் திடுக்கிட்டான். "உங்கள் உடம்பு ஏன் இப்படி நடுங்குகிறது!" என்று பரபரப்புடன் கேட்டாள் புவனா.

"ஒன்றுமில்லை" என்று சமாளித்துக் கொண்டான் தேவன்.

"வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் கலந்திருப்பதாகக் கூறுகிறார்கள். வாழ்க்கையில் எப்போது இன்பம் ஏற்படுகிறது! உங்களுக்குத் தெரியுமா!" என்றாள் அவள்.

"சிற்றின்பத்தில் எனக்கு அனுபவம் இல்லை. ஆனால் பேரின்பம் என்று சொல்லுகிறார்களே, அதை நான் பூர்ணமாக அனுபவித்தவன்" என்றான் தேவன்.

"ஏதோ சொர்க்க லோகத்தில் இருந்து குதித்தவர்போல் அல்லவா பேசுகிறீர்கள்!"

இவ்விதம் அவள் கூறியதும் தேவன் மறுபடியும் திடுக்கிட்டான்.

"வாழ்க்கையில் இன்பம் என்பது காதல் பூர்த்தியாகும்போது ஏற்படுகிறது. நான் உங்களைக் காதலிக்கிறேன். நீங்களும் என்னைக் காதலிக்கிறீர்கள். இனி நம்முடைய ஆசை பூர்த்தியாவதற்கு எவ்விதத் தடையுமில்லை. என் காதல் கருகிவிடுமோ என்று வெகு காலமாக நடுங்கிக் கொண்டிருந்தேன். அதனால்தான் இந்தக் கேள்வியை ஆரம்பத்திலேயே உங்களை நான் கேட்கவில்லை. 'இல்லை' என்று நீங்கள் சொல்லிவிட்டால்

என் கதி என்ன ஆவது என்று தயங்கிக் கொண்டிருந்தேன். இனி என் காதல் துளிர்விடும். அதி சீக்கிரத்தில் பூத்துக் குலுங்கும்.''

இச் சந்தர்ப்பத்தில் தேவன் ஒரு பெருமூச்சு விட்டான். அவன் கண்களில் நீர் ததும்பியது.

புவனா ஒன்றும் புரியாதவளாய் அவனையே உற்றுப் பார்த்தாள். தன் ஆர்வமெல்லாம் ஆகாயக் கோட்டையாக முடியுமோ என்ற பீதி அவள் முகத்தில் பிரதிபலித்தது.

''நான் உன்னைக் காதலிக்கிறேன் என்பது முற்றிலும் உண்மை. ஆனால்......நான் என் விருப்பத்துக்கு விரோதமாகப் பிரதிக்ஞை செய்து கொடுத்திருக்கிறேன். எனவே, என் ஆர்வத்தை நான் நிறைவேற்றிக் கொள்ள முடியாது......எனினும் நாம் என்றென்றும் நண்பர்களாக இருப்போம்'' என்றான் தேவன் தழதழத்த குரலில்.

அவள் ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்தாள். அந்தச் சிரிப்பு அழுகையைக் காட்டிலும் பரிதாபமாக இருந்தது. பிறகு தேவனின் தோளில் சாய்ந்தபடியே வெகு நேரம் விம்மி விம்மி அழுதாள்.

படகில் ஏறியபோது இருவரும் எல்லையற்ற உற்சாகத்துடன் இருந்தனர். ஆனால் படகிலிருந்து இறங்கியபோது சோகமே உருவாக இறங்கினர்.

*　　*　　*

**ப**டகிலிருந்து இறங்கியபின் இருவரும் சிறிது தூரம் வரையில் கால் தடுமாற, மௌனமாகவே நடந்து சென்றார்கள்.

''புவனா, என் மனத்தை நான் தேற்றிக் கொள்வதுபோல் உன் மனத்தை நீ தேற்றிக்கொள்ள வேண்டும். நான் பிரதிக்ஞை செய்து கொடுக்காம லிருந்தால் வெகு காலத்துக்கு முன்பே நான் நீ கேட்ட கேள்வியைக் கேட்டிருப்பேன். நமது அபிலாஷை வெகு காலத்துக்கு முன்னரே பூர்த்தியாகி யிருக்கும்'' என்றான் தேவன்.

''இனி என் மனதை யாராலும் தேற்ற முடியாது. நான் ஹிருதய பூர்வமாகக் காதலித்த ஒருவர், தாம் சிற்றின்பம் என்றால் என்ன என்பதையே அறியாத தேவ மனிதரைப் போல் பேசி என்னை ஏமாற்ற முயல்வதை நான் எவ்வாறு சகிக்க முடியும்!'' என்றாள் புவனா.

''புவனா, என்னைப் பற்றி இது வரையில் யாருக்கும் தெரியாத ஓர் இரகசியத்தை உனக்கு மாத்திரம் கூறுகிறேன். 'நீங்கள் தேவ புருஷனைப் போல் இருக்கிறீர்கள்' என்று நீ அடிக்கடி சொல்வது உண்டு அல்லவா! அது உண்மைதான். நான் தேவலோகத்திலிருந்து வந்தவன். தேவர்களில் ஒருவன்'' என்றான் தேவன் நிலைக்குரலில்.

தேவனின் வார்த்தைகள் புவனாவின் மனத்தில் எத்தகைய உணர்ச்சியையும் உண்டு பண்ணியதாகத் தெரியவில்லை. அந்த வார்த்தைகளை அவள் நம்பியதாகவும் தெரியவில்லை.

''சிற்றின்பத்தை வெறுக்கும் தேவர்களால் இந்த உலகத்துக்கு என்ன பிரயோசனம்! அவர்கள் சிருஷ்டியின் விரோதிகள் என்று கூடச் சொல்லுவேன். சிற்றின்பம் வெறுக்கப்படும் பட்சத்தில் உலகமே ஸ்தம்பித்து விடும். செடி கொடிகள் பூக்காது. மரங்கள் காய்க்காது. வாழையடி வாழையாக மானிடரின் சந்ததிகள் அபிவிருத்தி அடையாது. கவிகள் இருக்கமாட்டார்கள்; காதலர்கள் இருக்கமாட்டார்கள் ஒரே வார்த்தையில் கூறுவதாயின் பூலோகமே நசித்துப் பாலைவனமாகிவிடும். — இவ்வாறு சரமாரியாகக் கூறிய புவனாவின் வார்த்தைகளில் வெறுப்பும் ஏமாற்றமும் சோகமும் தாண்டவமாடின.

தேவனோ அவளது குற்றச்சாட்டுகளை மறுக்கத் துணியவில்லை; புவனா கூறிய ஒவ்வொரு வார்த்தையும் முற்றிலும் உண்மை என்று அவனுக்குத் தோன்றியது. அவனுக்குச் சக்தி இருந்திருந்தால் அவன் அந்தக்கணமே தேவ ஜன்மத்தை வெறுத்து மானிடனாகி யிருப்பான். ஆனால், அந்தச் சக்தி அவனுக்கு இல்லையே!

அவன் புவனாவை அவளுடைய வீடு வரையில் கொண்டு வந்து விட்டான்.

சோகமே உருவான புவனா மௌனமாகத் தன் வீட்டுக்குள் செல்ல யத்தனித்தாள்.

''உனக்கு என்மேல் கோபமா! நாளை மறுபடியும் என்னைச் சந்திப்பாயா!'' என்று கேட்டான் தேவன் கெஞ்சும் குரலில்.

''காதலனாக உங்களுக்குத்தான் என் மனத்தில் இடம்; நண்பனாக உங்களுக்கு என் ஹிருதயத்தில் இடமில்லை'' என்று சொல்லிவிட்டுப் புவனா படாரென்று கதவைச் சாத்திக் கொண்டாள்.

*　　*　　*

**அ**தே சமயம் தேவனுக்கு எங்கும் ஒளி மயமாகத் தோன்றியது. முப்பது வருஷங்களாக அவன் பார்க்காமல் இருந்த அவனது தேவலோக சகாக்கள் அவன் முன் திடீரென்று தோன்றினர்.

சுந்தர புருஷர்களான அவர்கள் அச்சமயம் தேவனின் கண்களுக்கு யம கிங்கரர்களைப் போல் காட்சி அளித்தனர்!

''அப்பனே! நீ தேவரகசியத்தை ஒரு மானிடப் பெண்ணிடம் கூறி விட்டாய். அவ்விதம் கூறியது சொர்க்க லோக விதிகளுக்கு முரணாகும். ஆகையால் அந்தக் குற்றத்துக்காக உனக்குக் கடவுளால் தண்டனை விதிக்கப் பட்டிருக்கிறது. நீ மறுபடியும் சொர்க்க லோகத்துக்கு வந்து விடவேண்டும் என்பதுதான் அந்தத் தண்டனை. அநித்யமான, துன்ப மயமான இந்த பூலோகத்தை விட்டு விட்டு நித்ய சாந்தியும், நித்ய சுகமும், நித்ய ஆனந்தமும் நிலவும் சொர்க்க லோகத்துக்கு வருவாயாக'' என்று தேவர்கள் அவனைப் பிடித்து இழுத்தனர்.

தேவன் அலறினான்.

''புவனா எவ்வளவோ வேண்டிக் கொண்டும் நான் அவள் அபிலாஷையை பூர்த்தி செய்ய மறுத்து என் பிரதிக்ஞையைக் காப்பாற்றினேன். அப்படி யிருந்தும் எனக்கு இந்தத் தண்டனை விதிப்பது அக்கிரமம், அநீதி. தேவ இரகசியத்தை வெளியிட்டதற்காக இவ்வளவு பெரிய தண்டனையா! என்னை விட்டு விடுங்கள். நான் இன்னும் இந்த உலக இன்பத்தைப் பூரணமாக அநுபவிக்கவில்லை. புவனாவின் கோரிக்கையை நிறைவேற்றினாலன்றி, சொர்க்க லோகத்தில் எனக்கு மன நிம்மதி ஏற்படாது. எனக்கு நித்ய சுகம் வேண்டாம்...புவனா! உன் வேண்டுகோளுக்கு இணங்க நான் மறுத்த பாவமே நான் அடையப் போகும் தண்டனைக்குக் காரணம். இந்த உலகத்தை விட்டுச் செல்ல நேரும் என்று எனக்குத் தெரிந்திருந்தால், நான் உன் கோரிக்கைக்கு இணங்கி இருப்பேன். சிற்றின்பத்தை நுகருவதில்லை என்ற என் பிரதிக்ஞையை நிறைவேற்றி யிருக்க மாட்டேன். உன் மடியில் தலை வைத்த வண்ணமே நான் சொர்க்க லோகத்துக்குச் சென்றிருப்பேன். நண்பர்களே! என்னை விட்டு விடுங்கள். இன்னும் ஒருநாளைக்காவது இந்தப் பூலோகத்தில் இருக்க அநுமதி கொடுங்கள்.''

இப்படி யெல்லாம் பலவிதமாகப் புலம்பிய தேவனைத் தேவர்கள் இரக்கமின்றிச் சொர்க்க லோகத்துக்கே இழுத்துச் சென்று விட்டனர்!

# ஆரோக்கிய ரகசியம்

## 20. வயிற்றுக் கோளாறுகள்

வயிற்றுக் கோளாறுகளில் பலவிதம் உண்டு. அதற்குப் பல காரணங்களும் உண்டு. இதற்கு முன் பல கட்டுரைகளின் மூலம் இதைப் பற்றி எழுதப்பட்டிருக்கிறது. இரைப்பை ஒன்று இருக்கிறது என்பதை மறந்து, கண்ட நேரத்தில், கண்டபடி சாப்பிட்டு, தேக பயிற்சியை உதாசீனம் செய்பவர்களுக்கே இம்மாதிரிச் சங்கடங்கள் எல்லாம் வரும். நுரை ஈரலின் அடியில் இருக்கும் டயாப்ரத்தின் அழுக்கம் கிடைக்காமல் வயிற்று உறுப்புகள் சரிந்து விடுவதினாலேயே அநேகமாய் வயிற்றுச் சங்கடங்கள் வரும். இதை எந்த மருந்தினாலும் தொங்கிப் போன, சரிந்து போன வயிற்று உறுப்புகளைத் தூக்கி வைத்து, அதற்கு டயாப்ரத்தின் அழுக்கம் அளிக்க முடியாது. மருந்தின் வேகத்தினால் டயாப்ரத்தின் அழுக்கம் இல்லாமல் சோம்பிக் கிடக்கும் வயிற்று உறுப்புகளுக்குச் சிறிது சுறுசுறுப்பை ஏற்படுத்தலாமே தவிர, எப்பொழுதும் அழுக்கத்தினால் ஏற்படும் பயிற்சியை மருந்து அளிக்க முடியாது. தொந்தி சரிந்து உடல் தளர்ந்தவர்களுக்கு, வயிற்றுச் சங்கடங்களுடன், மூச்சுத் திணறலும் ஏற்படுவது சகஜம். சிறிது நடந்தாலும், சிறிது வேலை செய்தாலும், கொல்லன் உலைக் களத்தில் துருத்தி மூச்சு விடுவதைப் போல் புஸ், புஸ் என்று மூச்சு விடுவார்கள். மாரடைப்பது போல் இருக்கும். சில சமயம் மார்பு வலிக்கும் சில சமயம் வலது விலா எலும்பின் கீழ் வலிக்கும்.

வயிற்றுச் சங்கடம் ஒன்றா இரண்டா சொல்லுவதற்கு. சாப்பிட்ட உணவு ஜீரணமாகாது. மலச்சிக்கல் ஏற்படும். வாயு வயிற்றுக்குள் ஓடுவது போல் இருக்கும். சில சமயம் அதிகம் பசி எடுக்கும். அப்போது உணவைப் போட்டுத் திணிப்பார்கள். சில சமயம் வயிற்றுப் போக்கு உண்டாகும். சில சமயம் மேல் வயிறு வலிக்கும். சில சமயம் அடி வயிறு வலிக்கும். இந்த மாதிரி ஒன்று மாறி ஒன்றோ, அல்லது ஒரே சமயம் இரண்டு மூன்று விதமான சங்கடங்களாலும் வருந்துவார்கள்.



சர்வாங்காசனம் பழகுங்கள் !

இம்மாதிரி சங்கடங்கள் ஏழையென்றும் பணக்காரன் என்றும் பாரபட்சம் பார்ப்பதில்லை. ஏழை வறுமையின் காரணமாய், உடலுக்கு ஒத்துக்கொள்ளாத, கிடைத்த ஆகாரங்களால் வயிற்றை நிரப்புவதனால் சங்கடப்படுகிறான். பணக்காரன் மிதமிஞ்சிய உணவால் வயிற்றுச் சங்கடத்தைச் சம்பாதித்துக் கொள்ளுகிறான்.

பசியால் வாடும் பஞ்சப் பட்டாளங்கள் ஒருபுறம் இருந்தாலும், ஆசை தீரச் சாப்பிட வயிறு இல்லையே என்று வருந்தும் கூட்டமும் ஒரு புறம் இருக்கத்தான் செய்கிறது. இத்தாலி தேசத்தில் ரோம் சாம்ராஜ்யம் மகோன்னத நிலையில் இருந்த காலத்தில், அங்குள்ள பிரபுக்கள் எந்நேரமும் எதையாவது சாப்பிட்டுக் கொண்டும், இனிய பானங்களைக் குடித்துக் கொண்டும் இருப்பார்களாம். வயிறு நிறைந்து விட்டது என்றால் நம்மைப் போலச் "சாப்பிட வயிறில்லையே" என்று வருந்த மாட்டார்களாம். சாப்பாட்டு அறைக்குப் பக்கத்தில், வாந்தி செய்யும் அறை என்று பிரத்தியேகமாய் இருக்குமாம். அங்கு விரல் கொடுத்துப் பலவந்தமாய் வாந்தி செய்து விட்டு, மறுபடியும் சாப்பிடுவார்களாம். சாப்பிட்ட பின், மீண்டும் வாந்தி செய்து விட்டுச் சாப்பிடுவார்களாம். இப்படியிருக்கும் இடத்தில் நண்பர்கள் யாராவது போனால் நம்மைப் போல "சாப்பிட்டு விட்டேன். வயிறு நிறைந்து விட்டது. வேண்டாம்" என்று சொல்லுவதற்கு முடியாதல்லவா! அப்படிச் சொன்னால் வாந்தி செய்யும் அறையைக் காட்டலாம். ரோமாபுரியே தீப் பற்றி எரியும் போது, சங்கீதத்தில் மூழ்கிக் கிடந்த அரசன் உள்ள நாட்டில் இம்மாதிரியெல்லாம் நடப்பதில் ஆச்சரியமென்ன! மனித சமூகம் இயற்கை வகுத்த சட்டத்தின் வரம்பை மீறிச் செல்லுகிறது. அதன் முடிவு ஆரோக்கியமின்மையும்; அகாலத்திலேயே சாவை அடைவதும் தான்.

உணவில் ருசியைக் கண்டவர்களுக்கு, அந்த உணவே அவர்களுக்கு யமனாய் முடிகிறது. ருசியாய் இருக்கிறது என்று அளவுக்கு மீறிச் சாப்பிடுகிறார்கள். அதனால் பலவித வயிற்றுக் கோளாறுகள் உண்டாகின்றன. அதற்காக மருந்தை அருந்துகின்றனர். வைத்தியர் இட்ட பத்தியம் சில நாள் தான் அனுசரிக்க முடிகிறது. ருசி கண்ட நாக்கு எந்நேரத்திலும் தூண்டிக் கொண்டேயிருக்கும். எத்தனை நாள் நாக்கை அடக்க முடியும்! 'வருவது வரட்டும். "வைத்தியர்கள் தான் இருக்கிறார்களே! மருந்துகள் தான் இருக்கின்றனவே! பார்ப்போம் ஒரு கை" என்று பழையபடி சாப்பிட ஆரம்பிக்கின்றனர். மறுபடியும் கோளாறுகள். மறுபடியும் மருந்து; பத்தியம். பிறகு நல்ல சாப்பாடு; கோளாறுகள், டாக்டர், மருந்து. இவ்வாறு செய்து செய்து, குடல்கள், உணவுப் பை எல்லாம் சோர்ந்து போய்ப் பிறகு சரிவரப் பசிக்காமல் சாப்பிட்ட உணவும் ஜீரணமாகாமல், உடலில் பலவீனம் உண்டாகிறது. இதற்கிடையில் குடல் சரிந்து டயாப்ரத்தை விட்டுக் கீழே தொங்கி விடும். பயிற்சி அற்ற குடல் நாளுக்கு நாள் வலிவிழந்து பலவிதமான சங்கடங்களுக்கு

இலக்காகிறது. இந்த நிலையிலும் வைத்தியர்கள் விட மாட்டார்கள். பலவித மருந்தையும் ஊசியின் மூலம் செலுத்துவார்கள். நோயாளிக்குச் சித்திரவதைதான். மீள வழிதெரியாமல் மீண்டும் மீண்டும் அதிலேயே மூழ்கி உழலுவார்கள்.

மூச்சுத் திணறலுக்கு என்ன செய்ய முடியும்; உடல் பெருத்ததுபோல் இருதயமும் பெருக்க வில்லையே! இருதயம் அவரவர் கை முஷ்டி அளவுதானே இருக்கும்! அது அவ்வளவு பெரிய தேகத்துக்கும் ரத்தம் பாய்ச்சி அனுப்ப ஏற்கெனவே சிரமப்படும். சிறிது பிரயாசை எடுத்து நடந்தாலோ, உயர ஏறினாலோ, வேலை செய்தாலோ, ரத்தம் அதிகம் தேவைப்படுவதால் இருதயம் எல்லா இடங்களுக்கும் முன்னிலும் அதிகம் பாய்ச்சி அனுப்ப வேண்டியதாய் இருக்கிறது. அதற்காக மூச்சும் சீக்கிரமாக இழுத்துப் பிராண வாயுவை ரத்தத்துடன் கலக்க வேண்டியதாய் இருக்கின்றது. இவ்வாறு சிறிது நேரம் தான் வேகமாக இருதயம் வேலை செய்ய முடியும். பிறகு களைத்து வேலை செய்ய முடியாமல் திணறும். அப்பொழுது மூச்சுத் திணறுவது போல் இருக்கும்.



சிரசாசனம் செய்கிறார்!

இதற்கு வைத்தியர்கள் தான் என்ன செய்ய முடியும்! மருந்துதான் என்ன செய்யும்! உடல் கனத்தைக் குறைக்காமல் வேறு எது செய்தாலும் பிரயோஜனப் படாது. 'நடக்கக்கூடாது; வேலை செய்யக் கூடாது' என்று சொல்லும் டாக்டர்களைத் தான் மக்கள் நம்புகின்றனர். இவர்கள் நடக்காமலும் அசையாமலும் இருக்க இருக்க இன்னமும் உடல் கனத்துச் சிறிது அசைந்தாலும் கஷ்டம் உண்டாகிவிடும். இம்மாதிரி நோயாளிகளால் வைத்தியர்களுக்கு நல்ல பென்ஷன் கிடைத்த மாதிரிதான். நோயாளியை இறக்கவும் விடாமல், சுகமாக்கவும் விடாமல் நிரந்தர வருமானத்தை அடைந்து கொண்டே யிருக்கலாம்.

எப்பொழுது வைத்திய உலகம், மருந்துடன் கூட உடற் பயிற்சியையும் சேர்த்துச் சிகிச்சை அளிக்குமோ, அப்பொழுதுதான் நமக்கு விமோசனம் உண்டு. இப்பொழுது, சில உண்மையான டாக்டர்கள் மருந்து மட்டும் கொடுக்காமல், உடற் பயிற்சியையும் சிபாரிசு செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். சிலர் யோகாசனங்களையே நேரடியாகச் சிபாரிசு செய்கின்றனர். சிலர் மறைமுகமாகப் பெயர் சொல்லாமல், தலையும், புஜமும் தரையில் வைத்துக் கால் மேல் தூக்கி இருக்கும் பயிற்சியை அதாவது சர்வாங்காசனத்தைச் செய்யும்படி சொல்லுகிறார்கள். சிலர் இந்த மாதிரியெல்லாம் சொல்லுவது, வைத்திய உலகத்துக்கு ஏதோ துரோகம் செய்ததாகும் என்று நினைத்து, ஆசனங்களைப் பற்றித் தெரிந்தும் வெளியில் சொல்லாமல் இருக்கின்றனர். சில டாக்டர்கள் விஷயத்தைச் சரிவரத் தெரிந்து கொள்ளாமலும், தெரிந்து கொள்ள இஷ்டப்படாமலும், "அவையெல்லாம் சுத்தப் பொய், அவைகளைச் செய்யவே கூடாது. மருந்தினால்தான் மார்க்கம் உண்டு" என்று சொல்லுகிறவர்களும் இருக்கிறார்கள். எனவே இவர்களெல்லாம் எப்பொழுது திருந்திப் பொது நோக்குடன் நமது யோகாசனத்தைச் சிபாரிசு செய்கின்றார்களோ, அப்பொழுதுதான் மக்களுக்கு நல்ல காலம் பிறந்ததாகும். நாம் பண்டைய பெருமையை வானளாவப் பேசிக் கொண்டிருக்கலாம். உண்மையில் அப்படிப்பட்ட பெருமையும் இருக்கலாம். ஆனால் அவைகளைத் தற்கால விஞ்ஞானம் ஒப்புக்கொள்ள வேண்டும். வைத்திய உலகம் ஏற்க வேண்டும். இதற்குக் கொஞ்சம் பகுத்தறிவு வேண்டும்.

மூச்சுத் திணறலால் சிரமப்பட்டுப் பலவித வைத்தியங்கள் செய்து தீராமல் கடைசியில் யோகாசனத்தினால் வியாதி தீர்ந்த அன்பர் மதுரை ஸ்ரீ ஏ. ஆர். சுப்பையர் எழுதியிருக்கும் கடிதத்தை அப்படியே பிரசுரித்திருக்கிறேன். இந்தக் கட்டுரையில் வெளியாகியிருக்கும் ஆசனப் படங்களும் அவருடையது தான். கடிதத்தைப் படித்துப் பாருங்கள்:

"ஒரு வருஷத்துக்கு முன் அலுவலைக்காகக் கிராமத்துக்குப் போய் வந்தேன். இருதயத்தில் வலியும், நடந்தால் தொண்டையில் வந்து ஏதோ அடைத்துக் கொள்வது போலவும் இருந்தது. மீறி நடந்தால் தலை சுற்றி மயக்கம் வருவது போலவும் இருந்தது. இந்த நிலைமையில் டாக்டரிடம் சென்றேன். சிகிச்சையும் ஆரம்பம் செய்யப்பட்டது. முதல் பதினைந்து நாள் வரை காலை மாலை சிறு நீரில் உள்ள சர்க்கரைக்கு இன்ஸுலினும், மார்புக்கு வேறு ஒரு இஞ்சக்ஷனுமாகக் கொடுத்தார்கள். என் உடலில் உழுவுத்தொழில் நடக்க ஆரம்பித்தது. டாக்டர்கள் என் நொந்த உடலை ஊசியினால் நன்றாக உழ ஆரம்பித்து விட்டார்கள்.

பின்னால் வயிற்றில் கோளாறு என்று வயிற்றில் இஞ்சக்ஷனும் நரம்பில் குளுகோஸ் இஞ்சக்ஷனும் ஆரம்பமாகிப் பதினைந்து நாட்கள் சென்றது. அப்பால் மலப் பரிசோதனை. பிறகு பூச்சிக்காக நெமட்டுடன் இஞ்சக்ஷன். பிறகு இருதயம் எக்ஸ்ரே எடுக்கப்பட்டது. இருதயம் பெரிதாகியிருக்கிறது என்றும் படுக்கையில் அசையக்கூடாதென்றும் படுக்கையில் அசங்காமல் படுக்க வைத்தார்கள். அப்பால் இரத்த சோதனை. இதற்

இடையில் வைட்டமின் பி.; பி. காம்ப்ளக்ஸ், பெனிஸிலின் என்னும் இஞ்சக்ஷன். மீண்டும் ஜுரத்துக்காக பென்ஸலின். பூச்சி வயிற்றில் சாகவில்லை என்று மலத் துவாரம் வழியாக விடுவான், போரிக்ஆஸிட் சோடா உப்பு இவைகளினால் சுமார் இருபத்தைந்து எனிமா. இதற்கிடையில் இருதயம் எக்ஸ்ரே. அப்பால் வயிற்றுக்கு பால்போரிய மருந்து கொடுத்து போட்டோ ஆறு எடுக்கப்பட்டது. நடுவில் விளக்கெண்ணெய் முதலிய மருந்துகள் அளவற்றவை. இவ்வளவு செய்தும் சுமார் நூற்று எழுபத்தைந்து இஞ்சக்ஷன் செய்தும் வியாதி பிடிபடாமல் என் நிலை ஆபத்தாய் விட்டது. மருந்து, பின்னும் ஓவல்டின் ஆர்லிக்ஸ் முதலியன ரூபாய் ஆயிரத்துக்கு மேலாகியும் என்னால் நடக்கவோ, எழுந்திருக்கவோ பேசவோ முடியவில்லை. மனம் நொந்து போய், நான் இரவு பகல் வழிபடும் ஆண்டவன் முருகனிடம் சென்று முறையிட்டேன். மனம் உருக பிரார்த்தித்தேன்.

ஊசியால் மெய்யில் உழுவுதொழில் செய்திடும்
மாசிலா வைத்திய மாந்தரிடம்—தேசிகா!
காட்டிக் கொடுத்தது போதுமே கார்த்திகா
மீட்டி யெனையாள் விரைந்து.

என்று மெய்யுருகப் பாடி வேண்டினேன். ஊசியால் உழுவு செய்யும் படலம் போதுமென்று நிறுத்திக் கொண்டேன். இந்தச் சமயத்தில்தான் "கல்கி"ப் பத்திரிகையில் ஸ்ரீ வி. என். குமாரசுவாமியின் ஆரோக்கிய ரகஸ்யக் கட்டுரையைப் படித்தேன். அதில் எனக்கு ஒரு துணிச்சல் உண்டாகி ஒருவருக்கும் தெரியாமல் சுவரோரமாகத் தலைகீழாய் நிற்கத் தலைப்பட்டேன். நாள் ஆக ஆக எனக்கு வயிற்றில் உள்ள வலி, எரிச்சல், உப்புசம், மூச்சுத் திணறல், இருதய நோய், கைகால் பிடிப்பு, நரம்பு வலி முதலிய எல்லாம் குறைந்து வந்தது. அப்பால் குற்றாலத்தில் ரசிகமணி டி.கே.சி. அவர்கள் ஸ்ரீ வி.என். குமாரசாமியை எனக்கு அறிமுகப்படுத்தினார்கள். அது முதல் சுமார் இருபது நாட்கள் வரை அவர் எனக்குச் சொல்லிக்கொடுத்தபடி சுமார் பதினாறு ஆஸனங்கள் செய்து கொண்டு வருகிறேன். இன்று நான் உத்ஸாகத்தோடு என் காரியங்களைச் செய்து வருகிறேன். நோயின்றி இருக்கிறேன். மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஆஸனம் செய்தால் தீராத நோயெல்லாம் தீர்ந்து விடும். இது என் சொந்த அனுபவம்!......"

**வா**சக நேயர்களுக்கு ஒரு வார்த்தை. மதுரை ஸ்ரீ ஏ. ஆர். சுப்பய்யரைப் போல் நூற்றுக் கணக்கானவர்கள் நோயினால் வாடி எல்லாவித வைத்தியங்களையும் செய்து எந்த விதமான பலனையும் காணாமல் கடைசியில் ஆஸனத்தைக் கைக்கொண்டு நோய் நீங்கி ஆரோக்கியமாக வாழ்ந்து வருகிறார்கள். ஆகையால் அன்பர்கள் ஒவ்வொருவரையும் நான் மிகத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். கிடைத்தற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றும் அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் நோயுடன் வாழ்வது நாம் இம்மையிலேயே நரகத்தில் இருப்பதற்கு ஒப்பாகும்.

கொஞ்சம் முன் யோசனையுடன் தினம் ஒரு மணி நேரம் ஆஸனம் செய்வதற்காகச் செலவழித்து ஆரோக்கியமாக வாழ்வதற்கு முயலக் கூடாதா? மருந்துக்கும் டாக்டருக்கும் கொடுக்கும் பணத்தை ஏதாவது நல்ல காரியங்களுக்கு உதவக் கூடாதா?

"உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே!" என்று திருமூலரின் திருமந்திரம் ஓதுகிறது. உடம்பை நோயின்றிப் பாதுகாத்துக் கொள்வதே சிறந்த தேச சேவையாகும். நாம் நோயின்றி இருப்பது நமது நாட்டுக்கு ஒரு பெருமையைக் கொடுக்கும். நம் வாழ்வு உயரும். (தொடரும்)

# டிரை பாட்டரி ரேடியோ ஸெட்டுகளில் மிக பெரிது

பி ஸீ எ 105. B, பிலிப்ஸின் புது டிரை பாட்டரி ஸெட்டுகளில், ரேடியோ டிஸைனிலும் உண்டாக்குவதிலும் நவீன அம்சங்கள் கொண்ட ஒரு ஸெட். 8 வால்வுகளின் அலுவல்களைச் செய்யும் 6 வால்வுகள் கொண்ட இந்த ஸெட்டின் விலை (பாட்டரி தவிர) ரூ 515/- உங்கள் பக்கத்து அதிகாரம் பெற்ற பிலிப்ஸ் டீலர்களிடம் இந்த ஸெட்டை காணவும் கேட்கவும் செய்யுங்கள்.



**பிலிப்ஸ் எலக்ட்ரிகல் கம்பனி (இந்தியா) லிட்.**

7, ஜஸ்டிஸ் சந்திர மாதப் ரோட், கல்கத்தா 20.



# மனைவியும் மைத்துனியும்

**ஹர்ஷன்**

சுந்தரம் அப்போதுதான் காரியாலயத்திலிருந்து திரும்பினான். உடைகளைக் கழற்றி வைத்துவிட்டுச் சாய்வு நாற்காலியில் சாய்ந்துகொண்டே அவன் யாருடைய வரவையோ எதிர்பார்ப்பதை அவன் முகம் தெளிவாக எடுத்துக் காட்டிற்று.

வளையல்களின் ஓசை அவன் காதில் விழுந்தது. ஆனாலும் தலையை நிமிராமல் அவளாகவே பேச்சுக் கொடுக்கட்டுமே என்ற எண்ணத்தோடு ஏதோ காரியமாக இருப்பவனைப் போல் பாசாங்கு செய்துகொண்டிருந்தான்.

வந்தவள் காப்பி டம்ளரை மேஜையில் வைத்து விட்டுத் திரும்பிப் போக யத்தனித்தாள். சுந்தரத்துக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. "என்ன, கமலா! காப்பியைக் கூப்பிட்டுக் கொடுத்தால் குறைந்தா போய் விடும்? அப்படி என்ன உனக்குத் தலை போகிற காரியம்?" என்று சொல்லிக்கொண்டே தலை நிமிர்ந்தான். அடுத்த நிமிஷம் அவன் முகத்தில் அசடு வழிந்தது.

விமலா சிரித்தாள். "என்ன அத்திம்பேரே! பழுத்த ஞானிக்கு எதைப் பார்த்தாலும் தெய்வமாகக் காட்சியளிக்குமாமே! அதைப் போல உங்களுக்கும் அக்காவிடம் அவ்வளவு பக்தியா என்ன?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே ஓடினாள் அவள்.

உள்ளே ஓடிய விமலா தன் தமக்கையிடம் சென்றாள் "என்ன அக்கா? உனக்காக அத்திம்பேர் காத்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு எதைக் கண்டாலும் உன்னைப்போலவே தெரிகிறதாம். நீ கொஞ்சம் அவர் அறைக்குப் போகக் கூடாதா?" என்றாள்.

கமலா கணவனின் அறைக்குள் நுழைந்தபோதும் சுந்தரத்தின் கோபம் தணியவில்லை. அதற்கு மாறாக அதிகப் பட்டிருந்தது.

"என்னைக் கூப்பிட்டீர்களாமே!"

சுந்தரம் பதில் பேசவில்லை.

கமலா சுந்தரத்தின் தலைப்பக்கம் வந்து நின்றாள். அவன் முகவாயைத் தன் பக்கம் திருப்பிக் கொண்டு தலையைக் கோணலாக சாய்த்த வண்ணம் "நீங்கள் எப்போது வரப் போகிறீர்கள் என்று காத்துக் கிடக்கும் எனக்கு இப்படித்தான் வரவேற்பளிப்பதா?" என்று கொஞ்சினாள்.

சீறி விழுந்தான் சுந்தரம். "உண்மையாகச் சொல்லு கமலா, எனக்காக நீ காத்துக் கொண்டிருந்தாயா? நான் இதை நம்ப முடியாது. எனக்காக நீ காத்துக் கொண்டிருப்பவளாயிருந்தால் விமலாவிடம் ஏன் காப்பியைக் கொடுத்தனுப்புகிறாய். நீயே எடுத்துக் கொண்டு வரமாட்டாயா?" என்றான்.

கமலா 'கலகல' வென்று சிரித்தாள்.

"தங்களுக்குக் கோபம் வந்ததன் காரணம் எனக்குத் தெரிந்து விட்டது" என்றாள்.

"விளையாடாதே கமலா! இந்தக் காரியங்களுக்கெல்லாம் விமலாவை எதற்கு அனுப்பி வைக்கிறாய்?" என்றான் கடுமையாக.

"நீங்கள் விமலாவை ஏன் இப்படிக் கரிக்கிறீர்கள்? அவள் உங்கள் வீட்டுச் சோற்றுக்குப் பாரமாக வந்து விட்டாள் என்ற எண்ணமா? ஏதோ எனக்கு ஒத்தாசையாக இருக்கட்டும் என்று அழைத்துக் கொண்டு வந்தேனே தவிர என் தகப்பனாரின் வீட்டில் கதி இல்லாமல் போய்விடவில்லை" என்றாள்.

"நான் சோற்றுக்காகவா சொல்லுகிறேன். புதிதாகக் கல்யாணம் செய்து கொண்ட கணவன், மனைவியிடம் அளவளாவிப் பேசி ஆசைப்படும் போது அவளுக்குப் பதிலாக அவள் தங்கை வந்து நின்றால் அவனுக்கு ஆத்திரமாக இருக்காதா? வயதுப் பெண்ணான கமலாவுக்கு இது ஏன் தெரியவில்லை" என்று மனத்துக்குள்ளாகவே நினைத்து அங்கலாய்த்துக் கொண்டான் அவன்.

* * *

கமலாவுக்கும் சுந்தரத்துக்கும் கல்யாணமாகி ஆறு மாதங்களே ஆகியிருந்தன. சென்னையில் ஒரு பெரிய உத்தியோகத்திலிருந்த சுந்தரத்துக்குத் தகப்பனார் இல்லை. தாயாரும் கிராமத்திலேயே இருந்தாள்.

ஒண்டிக் கட்டையாக விடப்பட்ட சுந்தரம் தன் எதிர்கால வாழ்க்கையைப் பற்றி மனக்கோட்டை கட்ட ஆரம்பித்தான். இளம் மனைவி கமலாவோடு அவன் நடத்த வேண்டிய வாழ்க்கையின் திட்டம் ஒன்று அவன் கற்பனையில் உருவாகி இருந்தது. அவன் வாலிப உள்ளம் புது வாழ்வின் இன்பமயமான நாட்களுக்காகக் காத்துக் கிடந்தது.

தங்களிருவரின் தனிமைக்கு இடையூறாக எதுவும் இருந்து விடக் கூடாதே என்பதற்காக அவன் அதிக வாடகையில் தனி வீடொன்றை அமர்த்திக் கொண்டான். கமலாவை அழைத்து வர நல்ல நாள் ஒன்றையும் குறித்துக் கொண்டு மாமனார் வீட்டுக்கு அவசரமாகச் சென்றான் அவன்.

அன்றைக்கு அவன் புறப்பட வேண்டிய நாள். புழக்கடையில் பல் துலக்கிக் கொண்டிருந்த அவனை அன்ன நடை போட்ட வண்ணம் நெருங்கினாள் கமலா.

அவள் ஏதோ சொல்ல விரும்புகிறாள் என்பதைச் சுந்தரம் தெரிந்து கொண்டான்.

"என்ன கமலா?" என்று கேட்டான்.

"அம்மா தங்கை விமலாவையும் துணையாக அழைத்துக் கொண்டு போகச் சொல்லுகிறாள். இடம் பழகும் வரைக்கும் கூடமாட இருக்

கட்டும் என்றாள். அவளுக்கும் பட்டணம் பார்க்க ஆசையாக இருக்கிறதாம்'' என்றாள்.

சுந்தரத்துக்குத் தன் தலையில் யாரோ அடிப்பதைப் போல இருந்தது. இந்த அதிர்ச்சியிலிருந்து மீட்சிபெற அவனுக்குக் கொஞ்சம் அவகாசம் தேவைப்பட்டது.

''நீங்கள் வேண்டாம் என்றால் வேண்டாம். எனக்கும் தனிக் குடித்தனம் புதிசு. மேலும் நீங்கள் ஆபீசுக்குப் போயிருக்கும் சமயம் எனக்குத் துணையாக இருப்பாளே என்று பார்த்தேன்......'' என்று இழுத்தாள்.

இதற்குள் தன்னைச் சமாளித்துக் கொண்ட சுந்தரம், ''ஏன் வரட்டுமே. நானே சொல்லலாம் என்று நினைத்தேன் ஆனால் அனுப்புவார்களோ மாட்டார்களோ என்று சந்தேகமாக இருந்தது'' என்று மென்று விழுங்கினான்.

வீட்டில் புறப்படும்பொழுது ஏற்பட்ட இந்த ஏமாற்றம் ரயிலில் ஏறிய பிறகும் நீடித்தது. கமலா 'சள சள' வென்று விமலாவோடு வழி நெடுக பேசிக் கொண்டு வந்தாளே தவிர சுந்தரத்தோடு ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

இந்த அனுபவம் சுந்தரத்துக்கு எரிச்சலைத் தந்தது. ''பிறந்த நாள் முதல் தங்கையோடு பேசிக் கொண்டிருக்கிறாளே? ஆசையாகக் காத்துக் கொண்டிருக்கும் என்னைக் கூட லட்சியம் செய்யாமல் அவளோடு பேச அப்படி என்னதான் விஷயம் இருக்க முடியும்?'' என்று அலுத்துக் கொண்டான் அவன்.

வீட்டிலும் கமலா இதே ரீதியில்தான் நடந்து கொண்டாள். சுந்தரம் தண்ணீர் கேட்டால் விமலாவிடம் டம்ளரைக் கொடுத்தனுப்புவாள். காரியாலயத்திலிருந்து சுந்தரம் திரும்பினால் காப்பியோடு விமலாவை அனுப்புவாள். கொஞ்சம் ஓய்வாக இருந்தால் விமலாவைக் கூப்பிட்டு ''ஏன் விமலா, அத்திம்பேரோடு கொஞ்சம் நேரம் பேசிக் கொண்டிரேன்'' என்பாள்.



ஏதாவது ஒன்று அது தனக்குக் கிடைக்காது என்ற எண்ணம் மனிதனுக்கு ஏற்பட்டு விட்டால் அந்தப் பொருள் எவ்வளவு அவசியமாகயிருந்தாலும்கூட அவன் அதற்காக வருத்தப்படுவதில்லை. மாறாக ஒரு பொருளை அவன் இச்சித்து, அதை வெகு சுலபத்தில் அடைந்துவிடலாம் என்ற எண்ணத்தோடு செய்யும்போது கடைசியில் அது கிடைக்காமல் போய்விடில் அவனால் அதை மட்டும் பொறுக்க முடியாமல் போய்விடுகிறது.

ஏறக்குறைய இதே நிலையில்தான் இருந்து தவித்துக் கொண்டு வந்தான் சுந்தரம்.

* * *

இதை எல்லாம் நினைத்துப் பார்த்துக் கொண்ட சுந்தரத்துக்கு அலுப்பாக இருந்தது. எங்கேயாவது போய்வரலாம் என்ற நோக்கத்தோடு கடற்கரைக்கு கிளம்பினான்.

ஆனால், அங்கேயும் அவன் தேடி வந்த அமைதி கிடைக்கவில்லை. கணவனும், மனைவியுமாக ஜோடி ஜோடியாய் அவனைத் தாண்டிச் சென்றதைப் பார்க்கப் பார்க்க அவனுடைய இதயம் குமுறத் தொடங்கிற்று. பற்றாக் குறைக்கு அவன் எரிச்சலைக் கிளர அவன் நண்பன் சங்கரன் வந்து சேர்ந்தான்.

''என்னப்பா இந்த அருமையான நேரத்திலே தன்னந்தனியாகக் கிளம்பி விட்டாய். உன்னைப் பார்த்தால் புதிதாகக் கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் செய்யும் வாலிபனாகவே தோன்றவில்லையே? இருபது வருஷம் குடும்பம் நடத்தி அலுத்துப்போனவன் போல அல்லவா தோன்றுகிறாய்?'' என்று சங்கரன் அடுக்கிக் கொண்டே போனான்.

சுந்தரம் பேசாமலிருந்தான்.

ஆனால் சங்கரன் விடுவதாக இல்லை. தோண்டித் துருவிச் சுந்தரத்தின் வேதனையின் காரணத்தைத் தெரிந்து கொண்டான். ''இது தானா? இதற்குக் கொஞ்சம் புத்திசாலித்தனம் வேண்டும்; அவ்வளவுதான். ஒரு விஷயம் நினைவில் வைத்துக்கொள். ஒரு பெண்ணை எவ்வளவு தூரம் இழிவாகப் பேசினாலும் அவள் பொறுத்துக் கொள்வாள். அவள் அழகில்லாதவள் என்று கேலி செய்தாலும் சரி. ஆனால், அவள் எதிரில் மற்றொரு பெண்ணைப்புத்திசாலி என்றோ அல்லது அப்பெண் அவளை விட அழகு என்று சொல்லி விட்டாலோ அவளால் பொறுக்க முடியாது'' என்று சொன்னான்.

சுந்தரத்துக்குக் குழப்பமாகவே இருந்தது. ஒன்றுமே புரியவில்லை.

''இன்னும் நான் ஏதாவது சொன்னால் அது கட்டிக் கொடுத்த சோறாகிவிடும். இனிமேல் உன்பாடு'' என்று சொல்லி விட்டுச் சங்கரன் அவனிடம் விடை பெற்றுக் கொண்டான்.

அதற்குப் பிறகு சுமார் ஒரு மணி நேரம் சுந்தரம் கடற் கரையிலிருந்தான். கடைசியாக அவன் மனத்தில் உறுதியான ஒரு திட்டம் உருவாகி இருந்தது. வீட்டுக்குப் புறப்பட்டான்.


ஒவ்வொரு புருஷனுக்கும்
அன்றாடம் தேவைப்படுபவை
நீங்கள் டாம்கோ ஓடிகொலோன் ஷேவிங் ஸ்டிக்கை உபயோகித்து முக க்ஷவரம் செய்து கொள்ளும்போது எக்காலும் அறிந்திராத குளுமையும் சுகமும் அனுபவிப்பதை உணர்வீர்கள். அது கொடிப்பொழுதில் நுரை தருகிறது—உலர்ந்துபோவதுமில்லை. கத்தி உங்கள் முகமீது மெத்தென வழுக்கிச் செல்கிறது!
டாம்கோ ஓடிகொலோன் ஸோப்பைத் தேய்த்து ஸ்நானம் செய்யும்போதும் நீங்கள் மட்டற்ற மகிழ்ச்சி அடைவீர்கள்—நயமான விலையில் அருமை மிக்க ஸோப்பு அது. அதன் ஜில் ஜில்ப்பான புதுமணம், உங்கள் அன்றாட வேலைகளை மலர்ச்சியுடன் துவக்க உதவி புரியும்!
EAU DE COLOGNE SOAP
டாம்கோ
ஓடிகோலோன் ஸோப்பு
மற்றும் ஷேவிங் ஸ்டிக்
தி டாடா ஆயில் மில்ஸ்
கம்பெனி லிமிடெட்

சுந்தரம் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். கமலாவும் விமலாவும் வழக்கம்போலப் பரிமாறிக் கொண்டிருந்தனர். "கமலா! என்ன இருந்தாலும் விமலா கெட்டிக்காரிதான். இலையில் எது இல்லை எது இருக்கிறது என்று கவனித்துப் பரிமாறுவதில் நீ கூட அவளுக்கு நிகர் இல்லை" என்றான் சுந்தரம்.

கமலாவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. ஆனால் அவள் உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டாள். "நாமாகத்தானே அவரை மத்தியானம் விமலாவிடம் அன்பாக இல்லை என்று கோபித்துக் கொண்டோம்" என்று சமாதானம் செய்து கொண்டாள் அவள்.

ஆனால் அவள் அகத்தின் அழகை முகத்தில் தெரிந்து கொண்ட சுந்தரம் தன் முதல் அஸ்திரமே வெற்றி பெற்றதில் மகிழ்ச்சி அடைந்தான். அன்று முதல் அவன் எதற்கெடுத்தாலும் விமலாவைப் புகழ்ந்தான்.

புதுப் புடவை கட்டிக்கொண்டு வருவாள் கமலா. "உன் நிறத்துக்கு இது எடுப்பாக இல்லை கமலா. இதையே விமலா கட்டிக் கொண்டால் ஜோராக இருக்கும் இல்லையா?" என்று கேட்டுச் சிரிப்பான்.

சமையலிலும் அப்படியேதான். கமலா சமையல் செய்திருந்தால் வேண்டுமென்று ஒதுக்கி வைப்பான். விமலாவின் சமையல் என்றால் போடச்சொல்லிச் சாப்பிடுவான்.

மெள்ள மெள்ள கமலாவுக்கு விமலாவிடம் வெறுப்பு ஏற்பட ஆரம்பித்து விட்டது.

* * *

அன்றைக்குக் காரியாலயத்திற்குக் கிளம்பும்போது சுந்தரம் கமலாவைத் தயாராக இருக்கும்படியும் சினிமாவுக்குப் போக வேண்டும் என்றும் சொன்னான். கமலா பாவம் பரக்கப் பரக்க வேலைகளை எல்லாம் முடித்து விட்டுக் காத்துக் கொண்டிருந்தாள்.

வேண்டுமென்றே சங்கரனைச் சாப்பிடக் கூப்பிட்டான் சுந்தரம். சாயந்திரம் வீட்டுக்கு வந்ததும், "கமலா என்றைக்கும் இல்லாமல் சங்கரன் நம் வீட்டுக்குச் சாப்பிட வருகிறேன் என்கிறான். அவனுக்கென்று மறுபடியும் சமைக்க வேண்டும். டிக்கட்டோ காலையிலேயே வாங்கி விட்டேன். நீ சமைத்துக் கொண்டிரு. நானும் விமலாவும் சினிமாவுக்குப் போய் வருகிறோம். மூன்று டிக்கட்டுகள் வீணாகப் போவதை விட ஒரு டிக்கட்டு வீணாகப் போவது பரவாயில்லை" என்றான் அவன்.

கமலாவுக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆனால் அவள் போட்ட விதைதானே இது!

அன்றைக்குச் சுந்தரமும் விமலாவும் சினிமாவுக்குப் போய்விட்டு வந்தனர்.

விமலாவோடு சினிமாவுக்குப் போக வேண்டும் என்பதற்காகவே சுந்தரம் அவ்விதம் செய்ததாகக் கமலாவுக்குத் தோன்றிற்று. சுந்தரத்துக்குத்தான் தெரியவில்லை என்றால் விமலா தான் வரமாட்டேன் என்று ஏன் சொல்லக்கூடாது என்று பொருமினாள்.



மனைவி:—இதோ, பாருங்களேன்! உங்கள் பிள்ளை எதற்கெடுத்தாலும் வாயாடுகிறான்! சொன்ன பேச்சைக் கேட்கமாட்டேன் என்கிறான்!

புருஷன்:—ஏலே! ஏண்டா இப்படிப் பண்ணுகிறாய்? என்னைப் பார்த்தா வது தெரிந்து கொள்ளேண்டா!

---

அன்று இரவு கமலா தூக்கம் பிடிக்காமல் புரண்டு கொண்டிருந்ததைப் பார்க்கச் சுந்தரத்துக்குப் பரிதாபமாக இருந்தது.

மறு நாள் ஞாயிற்றுக்கிழமை. சுந்தரம் வீட்டிலிருந்தான். மெள்ள அவனிடம் வந்தாள் கமலா. "விமலா இன்றைக்கு ஊருக்குப் போகிறாள்" என்றாள்.

"ஏன் அதற்குள் என்ன அவசரம்? இன்னும் கொஞ்ச நாள் இருக்கட்டுமே! நான் ஆபீஸுக்குப் போன பிறகு உனக்கு ஒத்தாசையாக இருப்பாள்" என்றான் சுந்தரம்.

கமலா எரிச்சலோடு "எத்தனை நாட்கள் தான் அவள் என்னோடு இருக்க முடியும்? எப்படி இருந்தாலும் அவள் அயல் வீட்டுப் பெண்தானே" என்றாள்.

"இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை. கடைகள் எதுவும் கிடையாது. விமலாவுக்கு ஏதாவது வாங்கிக் கொடுத்து அனுப்ப வேண்டாமா? திங்கட்கிழமையன்று அனுப்பிக் கொள்ளலாம்" என்று சுந்தரம் சொன்னதற்குக் கமலா பிடிவாதமாக மறுத்தாள். மிகவும் கஷ்டப்பட்டு அவளைச் சம்மதிக்கவைத்தான் சுந்தரம்.

திங்கட்கிழமையன்று விமலாவை ரயிலில் ஏற்றிவிட்டுக் கமலாவோடு தனியாக டாக்ஸியில் திரும்பிய போது சுந்தரம் தன்னையும் அறியாமல் தன் நண்பன் சங்கரனுக்கு மனதோடு வணக்கம் செலுத்தினான்.

# அந்த வயிற்று சங்கடத்தை இப்போதே தீர்த்துக் கொள்ளுங்கள்!



## அலக்ஷ்யப்படுத்தப் பட்ட அஜீரணம் அபாயகரமானது

மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் ஒரு டோஸ் உட்கொண்டால் எல்லா அசௌகரியங்களும் நீங்கிவிடும். அப்படி இருக்க அஜீரணம், அதனால் ஏற்படும் வயிற்று உப்புசம், குமட்டல், மார்வலி ஆகியவற்றினால் ஏன் கஷ்டப்படுகிறீர்கள்? மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர் சாஸ்திரீகமான முறையில் தயாரிக்கப்பட்டது. ஆகவே மேற்கண்ட நோய்களைச் சுலபமாய்க் குணப்படுத்துகிறது.




# மக்ளீன் பிராண்ட் ஸ்டமக் பவுடர்

வியாபாரிகளுக்கு: ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட். தபால் பெட்டி, 6527 பம்பாய் 26: தபால் பெட்டி 387, கல்கத்தா: தபால் பெட்டி 1370, சென்னை.

MSY-3 TAM

# ஓட்டமெடுத்தவன்

டி. ஜி. ஸ்ரீநிவாஸன்

மணி ஐந்தடித்ததும் பைல்களைச் சுற்றிக் கட்டி வைத்துவிட்டு ஆபீஸை விட்டு வெளியே வந்தாள் சரளா. ஆபீஸிற்கு அடுத்த சந்தில் திரும்பிக் கொஞ்ச தூரம் நடந்ததும் திரும்பிப் பார்த்தாள். கடந்த சில நாட்களாக அவ் வேளையில் அவள் பின்னால் வரும் 'புஷ் கோட்' வாலிபன் அன்றும் அவளைத் தொடர்வதைக் கவனித்ததும் அவள் முகத்தில் சிந்தனைக் குறி படர்ந்தது.



'இந்த உபத்திரவத்திலிருந்து எப்படித் தப்புவது?' என்ற யோசனையில் ஆழ்ந்தவளாய் மெதுவாக நடந்து கொண்டிருந்த அவள் கடைசியில் தைரியமாக ஒரு முடிவுக்கு வந்தாள்.

அந்தச் சந்தும் மெயின் ரோடும் சந்திக்கும் இடத்தில் இருந்த பஸ் நிற்குமிடத்தில் நின்று பஸ்ஸைப் பிடித்து வீட்டை அடைவது அவள் வழக்கம். அன்று அவள் பஸ் நிற்கும் இடத்தில் நிற்காமல் மெயின் ரோடிலேயே நடந்து சென்றுகொண்டிருந்தாள்.

மெயின் ரோடுக்கு அருகில் உள்ள பூங்காவனத்துக்குள் சரளா நுழைந்து உள்ளே சென்றாள். அவளைப் பின் தொடர்ந்து 'புஷ் கோட்' வாலிபனும் தொடர்ந்தான்.

பூங்காவில் ஓர் ஓரமாய் ஜன சந்தடி அதிகமில்லாத இடத்தில் ஒரு ஸிமெண்டு பெஞ்சியின் மேல் தன் கைப் பையை வைத்து விட்டு அமர்ந்தாள் சரளா. அவளைப் பின் தொடர்ந்த வாலிபன் சற்றுத் தயங்கி நின்று விட்டு அவள் உட்கார்ந்திருந்த பெஞ்சின் எதிரே, அவளைக் கடைக் கண்ணால் கவனித்தபடி மெதுவாக நடந்து சென்றான். சரளா உதட்டைக் கடித்துக் கொண்டாள். பின்னர் முகத்தில் புன்னகையை வரவழைத்துக் கொண்டு, "மிஸ்டர்! மிஸ்டர்!" என்று கூப்பிட்டாள்.

'மிஸ்டர் புஷ் கோட்' ஷாக் அடித்தவன் போல் திரும்பி, "என்னையா கூப்பிட்டீர்கள்!" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டான்.



"உங்களுடன் இன்று பேச வேண்டுமென்றுதான் இந்த பார்க்கில் நுழைந்தேன்" என்றாள் சரளா, புன்னகை தவழும் முகத்துடன்.

புஷ் கோட் வாலிபன் சுற்று முற்றும் பார்த்தான பிறகு முகத்தில் அசடு வழிய அந்த ஸிமெண்டு பெஞ்சியில் அடக்கமாக உட்கார்ந்தான்.

"ஏன் மௌனமாயிருக்கிறீர்கள்? அதோ அந்த மரத்தில் குயில் கூவுவது ரமணீயமா யில்லையா?" என்று கேட்டாள் சரளா.

"ஆமாம்: ஆமாம். இப்போது இங்கு எல்லாம் ரமணீயமாய்த்தான் இருக்கிறது" என்று சொன்னான் புஷ் கோட் வாலிபன்.

"உங்களைப் பார்க்கும் போது எனக்கு என் அண்ணாவின் ஞாபகம் வருகிறது. அவனும் ஒரு சங்கோஜப் பிராணிதான்" என்றான்.

"நான் ரொம்பவும் பாக்கியசாலி, இந்த நான்கு நாட்களாக நான் காணும் கனவு மட்டும் பூர்த்தியானால்" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

அவன் சொன்னது காதில் விழாதவள் போல், "என்னுடைய அண்ணாவுக்கு என்னைக் கண்டால் குலைநடுக்கம். ஓர் நாள் என்ன நடந்தது தெரியுமா?"

அந்த வாலிபன், "என்ன நடந்தது?" என்று கேட்டு அவள் பக்கம் நகர்ந்தான்.

"அண்ணாவுக்குச் சித்திரம் வரைவதென்றால் ரொம்பவும் பிடிக்கும். அதற்காக 'இண்டியன் இங்க்' பாட்டில் ஒன்று வாங்கி வைத்திருந்தான். ஒரு நாள் எனக்குக் கடிதம் எழுத மசி தேவையாயிருந்தது. அண்ணாவைப் போய்க் கேட்டேன். அவன் அந்த மசி சித்திரம் எழுதுவதற்கு மட்டும் தான் என்று சொல்லி கொடுக்க மறுத்து விட்டான்."

அந்த வாலிபன் "அப்புறம்!" என்றான்.

சரளா அவன் முகத்தைப் பார்த்தாள்.

தன் பக்கத்திலிருந்த கைப் பையைச் சாவதானமாகத் திறந்து அதிலிருந்து 'இங்க் பாட்டி'லை வெளியில் எடுத்தாள்.

"அப்புறம் என்ன? எனக்குக் கோபம் வந்துவிட்டது. அந்தக் கோபத்தில் அவன் பக்கத்திலிருந்த 'இங்க் பாட்டிலை' எடுத்து அவன் தலையில் மசியைக் கொட்டினேன்" என்று சொல்லியபடி கையிலிருந்த இங்க் பாட்டிலைத் திறந்து மசியை யெல்லாம் புஷ் கோட் வாலிபன் தலையில் கொட்டினாள்.

அவன் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தான். சரளாவைப் பார்த்தான்.

"இனி ஒரு தரம் உன்னை இங்கு பார்த்தால் உனக்கு வேறு விதமான அபிஷேகம் நடக்கும்" என்றாள் சரளா!

கோமாளித் தனமான புஷ் கோட்டை நாகரிகமென்று அணிந்திருந்த அந்த வாலிபன் திரும்பிப் பார்க்காமல் ஓட்டம் எடுத்தான்!

# துட்டிக் கதைகள்!

## முதல் மூடர்!

ஒரு அரசன் சில அந்நிய தேசத்து வர்த்தகர்களிடம் நல்ல உயர்ந்த ஜாதிக் குதிரைகளை வாங்கிக்கொண்டு மேலும் இரண்டு லட்ச ரூபாய்களைக் கொடுத்து, அந்தப் பணத்துக்கும் குதிரைகள் கொண்டு வரும்படி சொன்னான். அந்த வியாபாரிகளும் "ஆகட்டும்; அப்படியே கொண்டு வருகிறோம்" என்று சொல்லிவிட்டுப் பணத்தைப் பெற்றுக் கொண்டு போய்விட்டார்கள். இந்தச் சம்பவம் நடந்து சில மாதங்கள் ஆகிவிட்டன.

ஒரு நாள் மன்னர் தன் மந்திரியை அழைத்து "மந்திரி! நம் தேசத்தில் உள்ள மூடர்களின் பெயர்களை எழுதிக் கொண்டு வரவேணும்" என்று உத்தர விட்டார்.

"நான் முன்னமேயே இதற்கு ஒரு அட்டவணை எழுதி வைத்திருக்கிறேன். அதில் முதல் பெயர் தங்களுடையதுதான்" என்றார் மந்திரி.

மன்னருக்குத் தூக்கி வாரிப்போட்டது. "ஏன் அப்படி!" என்று கேட்டார்.

"குதிரைகளைக் கொடுத்த வர்த்தகர்கள் எந்த ஊரர் என்று தெரிந்து கொள்ளாமல், அவர்களிடத்தில் போதிய ஜாமீன் வாங்காமல் இரண்டு லட்ச ரூபாயை அவர்களிடம் கொடுத்ததால் மூடருடைய ஜாபிதாவில் முதன்மையாக உங்கள் பெயரை எழுதியிருக்கிறேன்" என்றார் மந்திரி.

"அவர்கள் குதிரைகளைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டால் அப்போது என்னசொல்வீர்!"

"அப்படிக் குதிரைகளைக் கொண்டு வந்து கொடுத்து விட்டால் தங்கள் பெயரை அடித்து விட்டு அந்த வியாபாரிகளின் பெயரை அந்த இடத்தில் எழுதிவிடுவேன்" என்றார் மந்திரி.

## கணவரின் சமாதானம்!

ஒரு மாது தன் கணவன் தன்னுடன் ஐந்து வருஷ காலம் பேசாமல் இருந்து விட்டதால் தனக்கு விவாக ரத்து வேண்டும் என்று கோரி நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்திருந்தாள்.

நீதிபதி அவள் கணவனைப் பார்த்து, "நீர் ஐந்து வருஷகாலமாக உம் மனைவியிடம் பேசாமல் இருந்தது உண்டா!" என்று கேட்டார்.

"ஆமாம், நான் என் மனைவியுடன் ஐந்து வருஷ காலமாகப் பேசியது கிடையாதுதான்" என்று கணவர் ஒப்புக்கொண்டார்.

"நீர் அதற்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறீர்!" என்று நீதிபதி சற்றுக் கடுமையாகவே கேட்டார்.

"பிரபோ! அவள் பேச்சுக்கு நான் இடை மறித்துப் பேச விரும்பாமலே இவ்வளவு காலமும் இருந்துவிட்டேன்" என்றார் கணவர்.

## நரியின் தைரியம்!

நரி முதல் தடவை சிங்கத்தைப் பார்த்தது. அதன் நீண்ட வாலையும் அடர்த்தியான பிடரி மயிரையும் பார்த்தவுடன் பயந்து நடு நடுங்கி வளையிட்டுக் கொண்டே ஓட ஆரம்பித்தது.

மீண்டும் ஒருமுறை அதே நரி சிங்கத்தைப் பார்த்தது. முன்போல் பயந்து ஓடவில்லை. மிகுந்த தைரியத்துடன் அந்தச் சிங்கத்தின் அழகைப் பார்த்து ரஸித்துக் கொண்டிருந்தது.

மூன்றாவது தடவை சிங்கத்தைப் பார்த்தபோது தைரியத்துடன் அதன் எதிரிலேயே சென்று, "என்ன, சிங்க ராஜாவே! சௌக்கியமாக இருக்கிறீர்களா! உங்கள் காட்டில் மாதம் மும்மாரி மழை பொழிகின்றதா!" என்று க்ஷேமலாபம் விசாரிக்கத் தொடங்கி விட்டது.

## யுத்தம் நின்றது!

ஒரு அரசன் வேற்று தேசத்தின் மீது படை யெடுக்கத் தயாரானான். அப்பொழுது அரசனுடைய முதன் மந்திரி "அந்த நாட்டைப் பிடித்த பிறகு நாம் என்ன செய்ய வேண்டும் அரசே!" என்று கேட்டார்.

"அதற்கு அடுத்த நாட்டையும் உடனே கைப்பற்றுவது!" என்றார் அரசர்.

"அப்புறம்!" என்றார் முதன் மந்திரி.

"இந்த உலகம் முழுவதையும் என் ஆட்சியின் கீழ் கொண்டு வரப் போகிறேன்" என்றார்.

"அப்புறம் என்ன செய்வது!" என்று தொடர்ந்து கேட்டார் முதன் மந்திரி.

"மீதியுள்ள காலத்தை அமைதியாகவும் இன்பமாகவும் கழிப்பேன்" என்றார் மன்னர்.

"அரசே, கடைசியில் செய்யப் போகும் அந்தக் காரியத்தை இப்போதே செய்து இந்தத் தேசத்து மக்களுக்கெல்லாம் அமைதியையும் இன்பத்தையும் நீங்கள் ஏன் அளிக்கக் கூடாது!" என்று மிகுந்த மரியாதையோடு கேட்டார் முதன் மந்திரி.

மன்னர் வாயடைத்து நின்றார்.

## ★ ஏட்டிக்குப் போட்டி!

ஒரு ஸ்திரீயின் மீது கார் மோதி நல்ல காயம் பட்டுவிட்டது. காரின் சொந்தக்காரர் மீது போலீஸார் வழக்குத் தொடுத்தார்கள். அவருடைய வக்கீல் அவரை நிரபராதி என்று நிரூபிப்பதற்காகத் தன்னுடைய வாக்கு வன்மை அத்தனையும் காண்பித்துப் பேசினார். கடைசியில் "என் கட்சிக்காரர் மீது தவறில்லை. இருபத்தைந்து வருஷங்களாக ஒரு சிறு விபத்து மில்லாமல் கார் ஓட்டி வருகிறார், தெரியுமா?" என்று வாதித்தார்.

உடனே சர்க்கார்தரப்பு வக்கீல் எழுந்தார். "அப்படியானால் என்னுடைய கட்சிக்கார அம்மாள் சொன்னதும் சரிதான். அவள் நாற்பது வருஷ காலமாக ஒரு விபத்தும் இல்லாமலே ரோடில் நடந்து கொண்டிருக்கிறாளே, தெரியுமா?" என்று பதில் கொடுத்தார்.

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras


பற்களை சுத்தம் செய்வது பாதி வேலை தான் . . .
தினமும் ஈறுகளைப் பாதுகாப்பது அந்த வேலையை பூர்த்திசெய் கிறது!
உங்கள் பற்கள் ஒழுங்காகவும் ஆரோக்யத்துடனும் இருந்தாலுங்கூட ஈறுகள் பலமற்றோ அல்லது நோயுற்றோ போனால் அவைகளை வெகு எளிதில் இழக்க நேரிடும். ஆகவே இந்த ஆபத்துக்குள்ளாகாதீர்கள்! தினமும் இருமுறை கிப்ஸ் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகியுங்கள். பல்வைத்தியர்கள் ஈறுகளை சிகிச்சை செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட் இதில் அடங்கியுள்ளது. மேலும் இது பற்களை பளிச்சென்று வெண்மையாக சுத்தம் செய்கிறது.
கிப்ஸ்
எஸ்.ஆர். டூத்பேஸ்ட்
பற்களை பளிச்சென்று வெண்மையாகவும் ஈறுகளை ஆரோக்யமாகவும் வைத்திருப்பதற்கென்றே பிரத்யேகமாக தயாரிக்கப்பட்டது.
S.R. TOOTHPASTE
for teeth and gums
S.R. TOOTHPASTE
for teeth and gums

REGD. No- M. 4392

*Registered as a newspaper in Ceylon*